KALKI
13.5.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



**+16**
இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்

## எல்லாம் நமக்காக!

மனத்தை நெறிப்படுத்தும் தத்துவத் துளிகள்

## குறட்டை விடும் காவல்துறை..?

### - விடுதலையாகும் குற்றவாளிகள்!



## சிவாஜி ரிலீஸ்...

## தாமதமாவது ஏன்?

20.5.2007
இதழ்...

# கல்கி

கல்கி
தரம் நிரந்தரம்

குடும்பத்துடன் படிக்க...

+16

# கண்கவர் ரகம்; காலத்துக்கும் தரம்!



# வட்டமேஜை



தப்பு செய்தால் மறைக்காமல் பெரியவர்களிடம் கூற வேண்டும். பொய்யால் மூடி மறைத்தால் நமக்கு அவமானமும், கஷ்டமும் ஏற்படும் என்று ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சார்ய சுவாமிகள் கூறிய அருள்வாக்கு உண்மை!

**- ஏ.ஜி.கல்யாணசுந்தரம், மணியக்காரன்பாளையம்**

பங்களாதேஷ் குறித்து ராகுல் காந்தி கூறிய கருத்துகள் கண்டனத்துக்குரியவை - இதனை தலையங்கம் அழகாகக் கூறி

# விழிகள் நனைந்தன!

யிருந்தது.

**- எஸ்.சுந்தரவடிவு, திருச்சி**

'பங்குச் சந்தையில் முதலீடு செய்வது எப்படி?' என்பதை வள்ளியப்பன் விளக்கியதிலிருந்து ஓர் உண்மை புலப்பட்டது.

'சே(ஷ)ரிடம் அறிந்து சேர்!'

**- ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி**

முதுமையின் வறுமை, கொடுமை, தனிமை ஆகியவற்றை வித்யா சுப்ரமண்யம் எழுத்தில் வடித்திருந்த விதம் வெகு சிறப்பு. எரியும் சிதைகளின் பிரதி பலிப்பினை கண்களில் காட்டியிருந்த ஷ்யாமின் ஓவியமும் அபாரம்!

**- சாந்தி சுந்தர், நெய்வேலி**

எல்லாமே இயற்கை வழியில் கிடைக்கும் என்னும் நம்பிக்கையை ஏற்படுத்திய இணைப்பு (டீம் வழங்கியது) கல்கி இதழுக்கு மேன்மை சேர்த்தது.

**- துரை ராமகிருஷ்ணன், ஏரகுடி**

ரா.பார்த்திபனின் தந்தை பாசம் படித்து முடித்தபோது என்னையும் அறியாமல் விழியில் இருந்து கண்ணீர் கசிந்தது.

**- ஜி.சக்திவேல், சிதம்பரம்**

கே.வி. ஆனந்த், ரஜினியைத் தொண்ணூறு வயதுக் கிழவனாகக் காட்டினாலும் ரசிக்க எங்கள் கூட்டம் காத்திருக்கு!

**எஸ்.அருள்சாமி, நாட்டரசன்கோட்டை**



‘விருதுகள் கொடுக்கப்படுவதில்லை; வாங்கப்படுகின்றன’ என்ற தலைப்பைப் பார்த்ததும் அதிர்ச்சியாக இருந்தது.

**- எம்.இராஜேந்திரன், லால்குடி**

தீ விபத்துகளை எப்படித் தவிர்ப்பது என்று கண்ணம்மா சொன்ன அறிவுரைகள் அத்தனையும் ‘பொன்’னம்மா!

**- தீபா, பெரம்பலூர்**

மறைந்த இசைக் கலைஞர்களுக்கும், இசையுடன் சம்பந்தப்பட்டவர்களுக்கும் அஞ்சலி செலுத்திவிட்டீர்களே! அவர்களின் ஆத்மா சாந்தி அடையட்டும்.

**- ஜே.துரைராஜ், சென்னை**

அமெரிக்கக் கல்வி நிலையங்களில் உயர் பண்பாடுகள் உருக்குலைந்து வருவதை ‘நச்’சென்க் காட்டியுள்ள கார்ட்டூன் அருமை!

**- கே.என்.பாலகிருஷ்ணன், கும்பகோணம்**

வாரம் ஒரு பாசுரத்தில், கடைசியில் திருமலை வலையில் வந்து விழுந்தால் சரி என்ற வரி மனத்தைக் கவர்ந்தது!

**- அம்மையப்பன், நெல்லை**

இந்திர கோபம் என்றால் பட்டுப் பூச்சி என்பதை ஆண்டாள் பாசுரம் வழியாகப் புலப்படுத்திய சுஜாதாவுக்கு ஒரு தமிழ் வணக்கம்!

**- எஸ்.ஏ.கேசவன், தூத்துக்குடி**

ரஜினியின் எளிமை, ஷங்கரின் திறமை இரண்டையும் புகழ்ந்து சொன்ன ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்தின் பேட்டி, சிவாஜி படம் தரமாக இருக்கும் என்ற நம்பிக்கையைக் கொடுக்கிறது.

**- பி.சிவா, பாளையங்கோட்டை**


# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 **யு.எஸ். டாலர்**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# கடவுள் உங்கள் முன் தோன்றினால்...?

● **பா.சிவா, பாளையங்கோட்டை**

***கற்பனை வளம் உள்ளவர்களுக்கு நிஜம் ஞாபகம் இருக்குமா?***

வளமான கற்பனை நிஜமுமல்ல; பொய்யுமல்ல. நாளைய நிஜத்துக்காக ஏங்கும் இன்றைய நல்ல பொய்... ''காசி நகர்ப் புலவர் பேசுமுரைதான் - காஞ்சியிற் கேட்பதற்கோர் கருவி செய்வோம்'' என்ற பாரதியாரின் வளமான கற்பனை நிஜமாகி இன்று நாம் ''செல்ஃபோன்'' வைத்தபடி வளைய வருகிறோம்.

மேலும் 'இடைஇடாது அணுக்களெல்லாம் சுழலுமென இயல் நூலார் இயம்பக் கேட்போம்' என்று sub-atomic particle' 'ஸ்பின்' பற்றிப் பாடிய பாரதியார் நிஜத்தைக் கற்பனையில் கண்ட விஞ்ஞான தீர்க்கதரிசி...

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

***தொட்டில் பழக்கம் சுடுகாடு வரை. கட்டில் பழக்கம்...?***

இதுவும் சுடுகாடு வரைதான். மற்றவர்களுக்கு வேண்டுமானால் துக்கம். நமக்கு நிம்மதியான நீண்ட தூக்கம்.



● **பி.எஸ்., திருநெல்வேலி**

***வாய்விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும் என்பது உண்மையா, பொய்யா?***

அறுவை சிகிச்சையின் போது வலி தெரியாமல் இருக்க அளிக்கும் 'அனஸ்தீஷியா' போன்றது நகைச்சுவை. எந்த விதப் பக்க விளைவும் இல்லாத சர்வ ரோக வலி நிவாரணி. வலி மறக்கும் அளவுக்கு வாய் விட்டுச் சிரித்தபடி வைத்தியரிடம் செல்ல, நோய் விட்டுப் போகும். 'டென்ஷனாக' நகைச் சுவையைக் கடித்தபடி இருப்பவர்கள் நகைச்சுவையை நாடினால் அவர்கள் நோயும் விட்டுப் போகும்; என் நாடக 'டிக்கெட்டும்' வித்துப் போகும்.

● **ராஜா, மைலாப்பூர்**

***ஞானம் பெற என்ன வழி?***

# கிரேஸியைக் கேளுங்கள்

ஞானம் பெற வழிதானே? 'ஷார்ட்-கட்' சொல்கிறேன். சென்னை மைலாப்பூரிலிருந்து நந் தனம் வழியாக வெங்கட்ரமணா சாலை தாண்டி மாம்பலம் பனங்கல் பார்க்குக்கு 'பீக்-ஹவரில்' மனைவியோடு புடைவை வாங்கக் காரில் செல்லுங்கள். 'டிராஃபிக்-ஜாமில்' விரக்தி வரும். மனைவி புடைவை 'செலெக்ட்' செய்ய எடுத்துக் கொள்ளும் நேரத்தில் வைராக்கியம் வரும். புடைவை விலையைப் பார்த்த 'ஷாக்கில்' எல்லாம் மாயை என்ற ரீதியில் ஞானம் என்ன... புத்தரின் நிர்வாணமே அடைவீர்கள்.

● **ஸ்ரீமதி எஸ்.தனலட்சுமி, பெங்களூர்**

***காவேரித் தாயை ஒரே சமமா பங்கு போட வழி என்ன?***

சாலப் பரிந்தூட்டும் அன்னையின் பாச(ன)த்துக்கு அணை போடாமல் இருந்தால் சரி.

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

***பட்டிமன்ற நடுவர், அழகிப் போட்டி நடுவர் இருவருக்கும் என்ன வேறுபாடு?***

பட்டிமன்றத்தில் 'சொல்லுக்கு'த் தீர்ப்பு. அழகிப் போட்டியில் 'ஜொள்ளுக்கு' மார்க்கு. அழகிப் போட்டியே சரியா? தவறா? என்று பட்டிமன்றம் வைத்தால் என்ன செய்வீர்கள் என்று அடுத்த வாரம் 'மல்லுக்கு' வராமல் இருந்தால் சரி.

● **எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

***இந்திய கிரிக்கெட் அணிக்கு ஒரு வேளை உங்களைத் தலைவராக்கினால்?***

அது என்ன நக்கலாக 'ஒரு வேளை!' தோத்துப் போக யார் தலைவராக இருந்தால் என்ன? கேள்விக்கு வருவோம். நான் தலைவரானால் 11 பேருக்குப் பதிலாக 'டீமில்' நான் ஒருவன் மட்டும்தான் இருப்பேன். One-day matchக்குப் பதிலா One-man match ஒத்தையாக



ஆடித் தோத்தால் கப் கிடைக்காவிட்டாலும் ஆறுதல் பரிசாக அட... சாலராவது தரமாட்டார்களா...?

● **சுவாமிநாதன், மன்னார்குடி**

***கடவுள் உங்கள் முன் தோன்றினால் என்ன வரம் கேட்பீர்கள்?***

நீண்ட நாள் தவம் செய்தால்தான் ஆண்டவன் வருவார். அதற்குள் தாடி, மீசை எக்கச்சக்கமாக வளர்ந்திருக்கும். So அரிப்பு தாங்காமல் கடவுளிடம் என்னையும் அறியாமல் நான் கேட்கும் முதல் வரம் சவரம். ●

"பாரதிய ஜனதா கட்சிக்கு இப்போது நேரம் சரியில்லை போலும். பிரச்னையைக் கிளப்பும் சி.டி., பாஸ்போர்ட் என விவகாரங்கள் ஒவ்வொன்றாக முளைத்துக் கொண்டிருக்கின்றன. அதன் பாராளுமன்ற உறுப்பினர்கள் சபையில் கேள்வி கேட்க பணம் வாங்குகிறார்கள். வெளிநாடுகளுக்கு ஆள் கடத்தல் போன்ற சட்ட விரோதமான காரியங்களில் ஈடுபடுகிறார்கள்; இவர்களுக்கு நேர்மையைப் பற்றிப் பேச என்ன தகுதியிருக்கிறது?'' என்று பா.ஜ.க.வை மடக்கும்போது, அதற்கு எதிரான வாதத்தை எடுத்து வைப்பது மட்டுமல்லாமல், எதிராளியின் பலவீனங்களையும் போட்டு உடைக்கும் திறமை வேண்டும். அத்தகைய திறமை வாய்ந்த முகமாக, தொலைக்காட்சிகளிலும், அச்சு ஊடகங்களிலும் தமிழக பா.ஜ.க. சார்பில் அறிமுகமாகியிருக்கிறார் வானதி சீனிவாசன். இவர் தமிழக பா.ஜ.க.வின் மாநில மகளிரணி பொதுச் செயலாளர். தொழில் வழக்கறிஞர்.

கடந்த நான்கைந்து வருடங்களாக, கட்சியில் இதே பொறுப்பில் இருந்தாலும் சமீபகாலமாக பளிச்சிடும் வானதியின் ஊர் கோவை மாவட்டம் உலியம்பாளையம் கிராமம். விவசாயக் குடும்பம்.

''கிராமத்து துவக்கப் பள்ளி, தொண்டாமுத்தூர் உயர்நிலைப்பள்ளி, பின்னர் கோவை பி.எஸ்.ஜி. கல்லூரியில் ரசாயனத்தில் பட்டப்படிப்பு என்று தொடர்ந்த வானதிக்கு, டிகிரி வாங்கிய பின்னர் ஒரு திருப்பம். ''கல்லூரியில் படிக்கும்போது, அகில பாரத வித்தியார்த்தி பரிஷத் என்ற மாணவர் அமைப்பின் கூட்டங்களில் கலந்து கொண்டேன். அவர்களது தேசிய உணர்வும், அர்ப்பணிப்பு மனப்பான்மையும் மிகவும் பிடித்ததால், எனக்கும் பொதுச் சேவையில் ஆர்வம் எழுந்தது. பிறகு, சென்னை சட்டக்கல்லூரியில் சேர்ந்து எம்.எல்.லும் முடித்தேன்'' என்கிறார் வானதி சீனிவாசன்.

ஹிந்துத்வா குடும்பத்தைச் சேர்ந்த ஏ.பி.வி.பி. மாணவர் அமைப்பில் மும்முரமாகச் செயல்பட்ட வானதி, சட்டப்படிப்பு முடிந்தவுடன் ஜூனியராகச் சேர்ந்தது காங்கிரஸ்காரரான சீனியர் வழக்கறிஞர் ஞானதேசிகனிடம். பிறகு, சில காலம் தொழிலில் கவனம் செலுத்தினார் வானதி. அப்போது வழக்கறிஞர் சீனிவாசனோடு காதலாகி, பெற்றோர்கள் சம்மதத்துடன் திருமணம்! இப்போது ஆதர்ஷ், கைலாஷ் என்று இரு குழந்தைகள். தனியாகக் களம் இறங்கிய வானதி, விட்டுப்போன தனது அரசியல் தொடர்பைப் புதுப்பித்துக் கொள்ள, பா.ஜ.க.வில்



இணைந்தார். கணவர் சீனிவாசன், சங்கக் குடும்பத்தின் இன்னொரு அங்கமான விஸ்வஹிந்து பரிஷத்தில் முக்கியப் பிரமுகர்.

வழக்கறிஞராக பல பொதுப் பிரச்னைகளையும் நீதிமன்றக் கவனத்துக்கு எடுத்துச் சென்று நிவாரணம் பெற்றுக் கொடுத்திருக்கிறார் வானதி. ''குறிப்பாக, ஏழு சுதந்திரப் போராட்டத் தியாகிகளுக்கு பென்ஷன் தொகை வாங்கிக் கொடுத்தேன். கோவை மாநகராட்சி, குடி தண்ணீருக்காக கிராமப் பகுதிகளில் ஆழ்குழாய் கிணறு தோண்ட இருந்தது. அந்தக் கிராம மக்களின் வேண்டுகோளின்படி நீதிமன்றத்துக்குச் சென்று தடுத்து நிறுத்தினேன்'' என்று சொல்லும் வானதி, நீதிமன்றத்துக்குச் செல்லாமலேயே, ஒரு காதல் ஜோடியைச் சேர்த்து வைத்ததைக் குறிப்பிடுகிறார்.



கிராமத்தில் ஒரு பெண்ணைக் காதலித்துக் கர்ப்பிணியாக்கி, காதலுக்கு 'டாடா' சொல்லப் பார்த்தார் ஓர் இளைஞர். ஒரு கட்டத்தில் அந்த இளைஞரும் பெண்ணும் தனியாகச் சந்தித்துக் கொள்ள வாய்ப்பு ஏற்படுத்தினார் வானதி. அவர்களுக்குத் தெரியாமல் டேப் ரிகார்டரை அங்கே வைத்தார். அதுவரை மற்றவர்களிடம் காதலைப் பற்றித் தவறாகப் பேசிவந்த பையன், பல உண்மைகளை மனம் திறந்து சொல்லிவிட்டார். பின்னர், மனம் திருந்தி கல்யாணம் செய்து கொண்டு இப்போது மனைவியுடன் சந்தோஷமாக இருக்கிறார்.

# சமூகப் பார்வை நல்லவிதமாக இல்லை!

வானதியால் மறக்க முடியாதது 2003-04ல் திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினராக இருந்தபோது கிடைத்த அனுபவம். ''இயக்குநர் - நடிகர் எஸ்.ஜே.சூர்யா தொடர்பான சம்பவத்தை மட்டும் மறக்க முடியாது'' என்கிறார். நியூ படத்துக்கான தணிக்கையின்போது ஆத்திரப்பட்ட சூர்யா, வானதியின் மேல் செல்ஃபோனை வீசிவிட்டார்! வானதி அவர்மீது வழக்கு போட்டுவிட்டார். இதற்காக கைதாகி ஜாமீனில் வெளிவந்தார் சூர்யா. ''வழக்கை வாபஸ் பெற வைக்க அரசியல் பிரமுகர்கள் மற்றும் நண்பர்கள் மூலமாக ப்ரஷர் கொடுக்கிறார் சூர்யா...



...முழு நேர அரசியல்வாதியாக இருக்கும் பெண்களின் மேல் சமூகத்தின் பார்வை நல்லவிதமாக இல்லை. அதே நேரம் பொறுப்புகளை ஏற்காமல் விலகி நிற்கவும் முடியாது'' என்கிறார் வானதி.

- ஸ்ரீநி

படம் : ஸ்ரீஹரி




“நீங்க சினிமாவில பாக்கிற அளவுக்கு நான் ஒண்ணும் ஜகஜ்ஜால பேர்வழி இல்ல. சொரண்டக்கூட வேணாம்.... சுண்டினாலே போதும், தில் ரூபா பின்னணியில சோகம் சோலோ பாடுற அளவுக்கு மனமே மயானமா இருக்கு.

பல நேரங்கள்ல என் முகமே செல்வக சிஸ்டமா மாறி, காது வழியா ஒரு கை வெளியே வந்து மௌளையைத் தட்டி சீரியஸ் லேர்ந்து மாறி மாறி search பண்ணி, ஹ்யூமரத் தொட, அது விரிய விரியத்தான் எனக்கும் வடிவேலுவுக்குமான நகைச் சுவைப் பகுதி சிரிப்பா சிரிக்கும்.

என்னைச் சுத்திச் சுத்தி நடக்கிற (நல் லதோ, கெட்டதோ) விஷயங்களைப் பொத் திப் பொத்தி வெச்சு அவசர ஆத்திரத்துக்கு அவுத்து விடுவேன்.

'புதிய பாதை' ரிலீஸ் ஆன புது சுல புயலடிக்கிற மாதிரி புகழடிச்சி நான் மூச்சுத் திணறி அடுத்த படத்திலேயும் இதே பேரக் காப்பாத்தணும்ன்ற ஜாக்கிரதை உணர்வுல, எந்தத் தயாரிப்பாளரைக் கண்டாலும் பயந்து ஒளிஞ்சுக்குவேன்.

ஒரு விநியோகஸ்தர் என்கிட்ட கதை சொல்ல எப்படியோ உருட்டிப் பொரட்டி ஒரு முப்பது நிமிஷம் நேரம் வாங்கிட்டாரு. அது நல்ல நேரமா, கெட்ட நேரமாங்கறது கதை சொல்லச் சொல்ல உங்களுக்கே புரியும்.

''சார்! 'புதியபாதை' எட்டடின்னா, நான் சொல்லப்போற கதை பதினாறடி பாயும்னு நீங்க நெனைப்பீங்க. அப்படி நெனைச் சிருந்தா அது தப்பு! இது முப்பத்திரண்டு அடி பாயும்.''

- கதை சொல்ல வந்திருந்த இயக்குநர், கண்ணாடி ஃப்ரேம் போட்டுச் சுவரில் மாட் டப்பட்ட ஒரு புகைப்படம் போல எக்ஸ்பிர ஷனே இல்லாமல் பேசிக் கொண்டிருந்தார்.

''சொல்லுங்க சார்!'' என்றேன்.

வெத்தலைச்சாறைத் துப்பிவிட்டு வந்த வாய்த்தாறலோடு... ''இந்தப் படத்துல உங் களுக்கு ஒரு இனிஸ்பெக்டர் ரோலு சார். இனிஸ்பெக்டர்னா......''- உதட்டில் பிரேக் போட்டு நிறுத்திவிட்டு கண்களில் பிராக் கெட் போட்டு அவர் என்னைப் பார்க்க, நான் அவரைப் பார்க்க அந்த இனிஸ்பெக் டர் கேரக்டரைப் பற்றி ஒரு முதல் தகவல்

ஜிகினா 5

ரா.பார்த்திபன்

அறிக்கை வெளியிடப் போகிறார் என்ற ஆவல் அவர் விட்ட இடைவெளி போலவே அதிகரித்தது.

மீண்டும் தொடங்கினார்.

''இனிஸ்பெக்டர்னா........ (ஒரு கால் தேக்கரண்டிப் புன்னகையை உதட்டில் தேக்கியபடி) அப்படி ஒரு இனிஸ்பெக்டர் சார்.''

(''அடடடடடடா, இவ்வளவு கனகச்சிதமா கதாபாத்திரத்தை விவரிக்கிறாரே!?'')

''புரியுதுல்ல சார்?''

- என் பொறி கலங்குற அளவுக்கு ஒரு கேள்வி கேட்டுவிட்டுத் தொடர்ந்தார்.

''நீங்க எந்த ஊருல இனிஸ்பெக்டரா சுத்துறீங்களோ, அதே ஊருல ஒரு ரௌடி இருக்கான். அந்த ரௌடிக்கும் உங்களுக்கும் ஃபைட்டு.''

''ஃபைட்டுன்னா...... (போச்சுடா) சண்டைன்னு நீங்க நெனைப்பீங்க. அதான் இல்ல. ஃபைட்டுன்னா... அப்படி ஒரு ஃபைட்டு. இங்கிலீஷ் படத்துல கூட பாத்திருக்க முடியாது.''

(போற போக்கப் பாத்தா நம்மளை ஹாலிவுட்டோட ஆக்ஷன் மஹா கிங்கா மாத்திடுவாரு போலிருக்கே!)

''அந்த ஃபைட்ல நீங்க செலிக்கிறீங்க. அதனால அந்த ரௌடி தோத்துடுறான். இப்ப உங்கள வேற ஊருக்கு டிரான்ஸ்ஃபார்ம் பண்ணிடுறாங்க'' (டிரான்ஸ்ஃபர் எனக் கொள்க)

''வேற ஊருக்குப் போறீங்க. அங்கதான் ஒரு டுவிஸ்டு. அந்த ஊர்ல ஒரு ரௌடி இருக்கான்.

அவனுக்கும் உங்களுக்கும் ஃபைட்டு. அந்த ஃபைட்டுல நீங்கதான் செலிக்கிறீங்க. செலிச்சி முடிஞ்சதும் உங்கள மூணாவது ஊருக்கு டிரான்ஸ்ஃபார்ம் பண்ணிடுறாங்க.''

**ச**த்தியமாக நான் எழுதுவதெல்லாம் சத்தியம்! சிரிப்பை அடக்கிக்கொண்டு அன்று நான் ரசித்த அதே அளவு காமெடியை இந்த எழுத்துக்குள் கொண்டு வர முயல்வது என் விருப்பம். முடியாதது என் வருத்தம்... தொடர்ந்தார்...

''மூணாவது ஊருலதான் ஒரு முக்கியமான டுவிஸ்ட்டு. அங்கதான் நீங்க ஹீரோயினைப் பாக்குறீங்க. ஹீரோயின்னா...''

உடனே நான், 'அப்படி ஒரு ஹீரோயின்!' - எனச் சொல்ல, பட்டென பற்றிக்கொண்ட என் கற்பூரப் புத்தியைத் தன் கண்களாலேயே ஆராதித்து அணைத்தபடி 'நீங்களே ஒரு கதாசிரியர் உங்களுக்கு நான் நிறைய சொல்ல வேண்டியதில்ல...'

அந்தக் கதாநாயகிப் பொண்ணு உங்களைப் போய் லவ் பண்ணுது சார். (சற்றுக் கேவலமான தொனியுடன்). அந்த எடத்துல எல்லா டைரக்டரும் என்ன பண்ணுவாங்க? டூயட்தான போடுவாங்க! அங்கதான் இந்த அதிவீரபாண்டியன் (இது மட்டும்தான் என் கற்பனை) வித்தியாசப்படுறான்.

''டூயட் போட வேண்டிய இடத்துல ஃபைட்டைத் தூக்கிப் போடறான். மூணாவது ரௌடியும் நீங்களும் போடுற ஃபைட்ல, நீங்க செலிக்கிறீங்க. ஆனா

# அதிவீரபாண்டியனின் இன்ஸ்பெக்டர்!

உங்களைத் தூக்கி வெளியூருக்கு டிரான்ஸ்ஃபார்ம் பண்ணிடுறாங்க.'' (எனக்கோ தூக்கித் தூக்கிப் போடுது)

''சினிமாவக் கரைச்சுக் குடிச்சிருக்கேன். ஒன்னுக்கு பிளேடர் (அது bladder) ரொம்பும்போது எவன் இன்டர்வெல் விடுறானோ அவன் தான் சிறந்த டைரக்டர். நீங்க மொத படத்திலேயே 'ப்ரூ' பண்ண மாதிரி, நான் இந்தப் படத்திலேயே ப்ரூ பண்ணப் போறேன் சார். அதனால இந்தக் கட்டத்துல இடைவேளை விடறேன் சார்'' எனக்கூறிக் கொண்டே பாத்ரூமுக்குள் நுழைந்தார்!

எனக்கும் 'விட்டால் போதும்' போலிருந்தது; விடவில்லை விடாக்கண்டன்.

''இன்டர்வெலுக்கு அப்புறம்தான் சார் கதை சூடு பிடிக்குது. (ஏற்கெனவே மண்டை காயுது; இனியும் சூடு பிடிச்சி அந்த இனிஸிபெக்டர் என்னப் பண்ணப் போறாரோ?)

''நாலாவது ஊருலயும் ஒரு ரௌடி'' என்று ஆரம்பித்து உடம்பு வலித்து மனசு நோகும் வரை ஹீரோவை டிரான்ஸ்ஃபாரம் செய்து ஒருவாறு கிளைமாக்ஸில் நிறுத்த மனம் இன்றி புல்டோஸர் ஓட்டிய அவரிடம் நான் என்ன, எப்படி ரியாக்ட் செய்வது?

''கொஞ்சம் டைம் கொடுங்க, யோசிச்சு சொல்றேன்''- நான்.

''யோசிக்கத்தான் நான் இருக்கேனே! யோசிக்காம சரின்னு சொன்னீங்கன்னா உங்க டைம் நல்லாயிருக்குன்னு அர்த்தம்'' எனக் கூறிக்கொண்டே பந்தாவாக நடையைக் கட்டினார், கதைசொல்லி.

**சி**ல வருடங்கள் கழித்து அவரை மீண்டும் சந்தித்தேன். தாடிக்குள் முகம், ஹாங்கரில் மாட்டப்பட்ட சட்டை போல அவர் உடல் நடந்து வந்து கொண்டிருந்தது. அவருடைய நம்பிக்கை மட்டும் ஜோல்னா பையாகத் தொங்கிக் கொண்டிருந்தது.

''என்ன சார் பண்றீங்க?'' கனிவோடு கேட்டேன்.

''ரஜினிகிட்ட கதை சொல்ல டைம் கேட்டிருக்கேன். எங்க சார், மணிரத்னம், ஷங்கர்னு இவங்க பின்னாடிதான் இந்த இண்டஸ்டிரி இருக்கே தவிர, நம்பளை மாதிரி திறமையாளவங்களைப் பயன்படுத்திக்க மாட்டேங்குதே.''

ஆதங்கமாக - ஆத்திரமாக - ரௌத்திரமாகப் பேசினார். எனக்குப் பாவமாகப் பட்டது, அவரைப் பார்க்க.

**அவருடைய நம்பிக்கை மட்டும் ஜோல்னா பையாகத் தொங்கிக் கொண்டிருந்தது.**



திறமையோடு வாய்ப்புக்காகப் போராடும் இளைஞர்கள் இத் துறையில் ஏராளம். ஆனால் தனக்குத் திறமையில்லை, அல்லது வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற சுயதரிசனமே இல்லாமல் போராடும் ஒரு சிறிய கூட்டமும் இங்கே இருக்கிறதோ?

இயக்குநர்கள் சங்கம் மூலம் கலந்துரையாடல் கவுன்ஸெலிங் முறையில், வாய்ப்பு தேடுபவர்களை நெறிபடுத்துவது நலம் என்று சிந்தித்துக் கொண்டிருக்கையில்...

சற்று தூரம் போன அ.வீ.பாண்டியன் திரும்பி வந்து என்னிடம், ''நீங்க நடிக் காட்டி கூட பரவாயில்லை. என் கதையை மட்டும் எங்கயும் லீக் அவுட் பண்ணிடாதீங்க. ஏன்னா ரஜினியே நடிக்கலைன்னாலும் ரஜினி பட கலெக்ஷன் இந்தக் கதைக்கு''- கூறிவிட்டு விறுவிறு மாண்டியாய் நடையைக் கட்டினார்.

**(மின்னும்)**

# பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம்

## அஞ்சல் வழிக் கல்விப் பிரிவு

229, என் எஸ் ஸி போஸ் சாலை, சென்னை - 600 001

தொலைபேசி : 044-25340226 ஃபேக்ஸ் 044-25261013

1. பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமா சான்றிதழ் பயிற்சி (தமிழ் மற்றும் ஆங்கில மீடியம்)
2. பேச்சு மொழி ஆங்கிலம் டிப்ளமா சான்றிதழ் பயிற்சி (தமிழ் மீடியம்) (ஹிந்தி மற்றும் ஆங்கில மொழிகளில் சரளமாகவும் இயல்பாகவும் பேச, உரையாட மற்றும் எழுத - படிக்கப் பயிற்சி)

நுழைவுத் தகுதி : மொழி கற்கும் ஆர்வமுடைய அனைவரும் இப்பயிற்சியில் சேரலாம்;

பாடத் திட்டம்: எழுத்துகளை செவ்வனே உச்சரிக்கப் பயிற்சி, அடிப்படைப் பேச்சு மொழி இலக்கணம், பற்பல சூழ்நிலைகளில் தயக்கமின்றி பேசப் பயிற்சி அளிக்கப்படும். பயிற்சியின் இறுதியில் 'பேச்சு மொழி சொற்களஞ்சியம்' வழங்கப்படும்.

பயிற்சிக் காலம்: ஆறு மாதங்கள். (ஜனவரி முதல் ஜூன் வரை மற்றும் ஜூலை முதல் டிசம்பர் வரை) அடுத்த பயிற்சி ஜூலை 2007-ல் துவங்கும்.

நேர்முகப் பயிற்சி: சென்னையில் ஐந்து நேர்முகப் பயிற்சி வகுப்புகள் (ஞாயிற்றுக் கிழமைகளில்) காலை 10.00 முதல் மாலை 5.00 மணி வரை (மதிய உணவுடன்) நடைபெறும். தவிர திருச்சி, மதுரை, கோயம்புத்தூர், தஞ்சை ஆகிய இடங்களில் தலா இரண்டு நேர்முகப் பயிற்சிகள் நடக்கும்.

மொழிவள மேம்பாட்டு மையங்கள்: சென்னை, திருச்சி, மதுரை, கோயம்புத்தூர், தஞ்சை, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் மற்றும் புது தில்லி ஆகிய இடங்களில் மொழிவள மேம்பாட்டு மையங்கள் உள்ளன. நேர்முகப் பயிற்சியில் கலந்துகொள்ள முடியாதவர்கள் இம் மையங்களை அணுகி பாட சம்பந்தப்பட்ட சந்தேகங்களுக்கு விளக்கம் பெறலாம்.

தேர்வு: ஜூன் மற்றும் டிசம்பர் மாத இறுதி வாரத்தில் தேர்வு நடத்தப்படும். தேர்ச்சி பெற்றவர்களுக்கு Diploma in Conversational Hindi / Diploma in Conversational English என்ற சான்றிதழ் வழங்கப்படும். தேர்வுகள் சென்னை, திருச்சி, மதுரை, கோயம்புத்தூர், தஞ்சை, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான் மற்றும் புது தில்லி ஆகிய இடங்களில் நடைபெறும்.

பயிற்சிக் கட்டணம்: பயிற்சி, தேர்வு மற்றும் நேர்முகக் கட்டணம் உட்பட மொத்தம் ரூ 700 (எழுநூறு ரூபாய் மட்டும்)

ஒலிநாடாக்கள் மற்றும் சிடி: பேச்சு மொழி ஹிந்திக்கென இரட்டை ஒலிநாடாக்களும் பேச்சு மொழி ஆங்கிலத்திற்கு சிடி (குறுந்தகடுகள்) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றைப் பெற விரும்புபவர்கள் ரூ 150/-க்கான டிடி/உள்ளூர்க் காசோலை (SBIOA Institute, Chennai என்ற பெயரில்) அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். இரண்டையும் பெற விரும்புப வர்கள் ரூ 300/-க்கான டிடி/ உள்ளூர்க் காசோலை அனுப்ப வேண்டும்)

ஜூலை 2007ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் 100 ரூபாய்க்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது உள்ளூர்க் காசோலை (SBIOA Institute, Chennai) என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, ரூ.10/-க்கான தபால் தலையுடன் கூடிய உறையில் மேல் குறிப்பிட்டுள்ள முகவரிக்கு எழுதவும். தபால் தலைகளை ஒட்டாமல் உறையினுள் வைத்து அனுப்ப வேண்டும். (ஒவ்வொரு பயிற்சிக்கும் தனியாக ரூ. 100 அனுப்ப வேண்டும்) உறையின் மேல் பேச்சு மொழி ஹிந்தி அல்லது பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பயிற்று மொழியைக் குறிப்பிட வேண்டும். (இந்த ரூபாய் 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.)

டாக்டர் எஸ். விஜயா
பாடத்திட்ட இயக்குனர்

ஜி. சந்தானம்
நிர்வாக இயக்குனர்

குறிப்பு : இம் மையத்தில்

1. பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பேச்சு மொழி தமிழ் ஹிந்தி மொழி மூலம் நடத்தப்படுகின்றது.

2. (a) Post Graduate Diploma in Translation (Hindi- English) (b) Post Graduate Diploma in Journalism (Hindi medium) (C) Post graduate Diploma in Personnel Administration and Human Resource Management (Hindi medium) ஆகியவையும் தபால் மூலம் நடத்தப்படுகின்றன. (duration 1 year - June to May, fee-Rs. 1750/- Application - Rs. 100)



# உயரும் அந்நியச் செலாவணி...

அன்றாட வாழ்க்கைக்குத் தேவைப்படும் அத்தியாவசியப் பொருள்களின் விலை ஏறிக்கொண்டே போகிறது. ஆனால் நமது நாட்டின் அந்நியச் செலாவணிக் கையிருப்பு மட்டும் 200 பில்லியன் டாலர்! ஏன் இந்த விலைவாசி ஏற்றம்? இதற்கும் 200 பில்லியன் டாலர் கையிருப்புக்கும் சம்பந்தமுண்டா? 200 பில்லியன் டாலர் அந்நியச் செலாவணிக் கையிருப்பு எப்படி சாத்தியமானது?

கொஞ்சம் ஃப்ளாஷ் பேக்கில் போவோம். 1991-ல் பெரிய அளவில் அந்நியச் செலாவணிப் பற்றாக்குறை ஏற்பட்டது. நம் நாட்டின் மத்திய ரிசர்வ் வங்கி, இந்தியத் தங்கம் 100 டன்னை, அந்நிய நாட்டு வங்கியில் அடகு வைத்துப் பணம் வாங்கி, நலிந்த பொருளாதாரத்தை ஓரளவுக்குச் சீர்ப்படுத்தியது. மத்தியில் ஆட்சியிலிருந்த நரசிம்மராவ் அரசு பல்வேறு பொருளாதார நெருக்கடிகளைச் சீர் செய்ய இறக்குமதி விதிகளைக் கடுமையாக்கியது. அப்போதைய நிதியமைச்சர் மன்மோகன் சிங், அந்நிய நாட்டு முதலீடுகளை வரவேற்றார். அவற்றை அனுமதிக்கும் வகையில் கொள்கைகளை தாராளமயமாக்கினார். அதன் விளைவாக வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் இந்தியப் பங்குச் சந்தையில் நிறைய முதலீடு செய்தன. வெளிநாடு வாழ் இந்தியர்கள் இந்தியாவுக்கு நிறைய டாலர்களை அனுப்பினர். வெளிநாட்டு வர்த்தக மற்றும் தொழில் நிறுவனங்கள் இந்தியத் தொழில் துறையில் முதலீடு செய்தன. இந்த வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் கொண்டு வந்த டாலர்களை மாற்றி இந்திய ரூபாய்களாகக் கொடுப்பவை இந்திய வங்கிகளும், ரிசர்வ் வங்கியும்தாம். இப்படி வெளிநாட்டு முதலீடு நிறுவனங்கள் இந்தியப் பங்குச் சந்தையில் சுமார் 60 பில்லியன் டாலர்களும், வெளிநாட்டு வாழ் இந்தியர்களின் பணம் சுமார் 40 பில்லியன் டாலரும் சேர்ந்து 100 பில்லியன் டாலரை இந்தியாவுக்குக் கொடுத்தது. பங்குச் சந்தை முதலீடாக மட்டுமே இந்த 100 பில்லியன் டாலர்!

ஆனால், இப் பணம் இந்தியப் பொருளாதாரத்தை மேம்படுத்தவில்லை. மாறாக, பணவீக்கத்தையும் விலைவாசியையும் அதிகரித்தது. எப்படி? ஒரு நாடு பொருளாதார முன்னேற்றமடைய வேண்டுமானால் அந் நாட்டில் உற்பத்தி பெருக வேண்டும். தொழில் உற்பத்தி மூலமாகவோ, விவசாயத்தின் மூலமாகவோ, சேவைத் தொழில்கள் மூல



# எகிறும் விலைவாசி...!



மாகவோ வருவாய் கிடைத்தால்தான் பணப்புழக்கம் அதிகரிக்கும். உற்பத்திப் பெருக்கமும், பணப் புழக்கமும் நேரடித் தொடர்புடையவை. ஆனால், பொருள் உற்பத்தி அதிகமாகாமல் பணப்புழக்கம் மட்டுமே அதிகரித்தால் பணவீக்கம் தான் (inflation) உண்டாகும். உற்பத்தியை அதிகரிக்காத அந்நியச் செலாவணியின் கையிருப்பு பணவீக்கத்துக்கு வழிவகுக்கிறது.

அந்நிய நாட்டு முதலீட்டு நிறு வனங்கள் தங்களுடைய டாலரை ரிசர்வ் வங்கியில் ரூபாயாக மாற்றி நம் பங்குச் சந்தையில் முதலீடு செய்கின்றன. அந்நிய டாலருக்கு ஈடாகக் கொடுக்கும் இந்திய ரூபாய்களை ரிசர்வ் வங்கியின் கையிருப்பிலிருந்தோ அல்லது புதிதாக அச்சடித்தோ கொடுக்கும்போது அப்பணம் இந்தியாவில் முதலீடு செய்யப்பட்டு அதனால் நம் நாட்டில் பணப்புழக்கம் அதிகரிக்கிறது. அதிக பணப்புழக்கம் பொருட்களின் விலை ஏற்றத்துக்கு அடிகோலுகிறது. ஏனெனில் ரிசர்வ் வங்கி டாலருக்குப் பதிலாகக் கொடுத்த ரூபாய் நாட்டின் உற்பத்தியை அதிகரிக்கவில்லை; ஆனால் பணப்புழக்கத்தை அதிகப்படுத்தியுள்ளது. இந்தப் பணப்புழக்கம் வசதி படைத்த மக்களின் வாங்கும் சக்தியை அதிகப்படுத்தி, பொருட்களின் விலை ஏற்றத்தை ஊக்குவிக்கிறது. இதனால் பணவீக்கம் கட்டுக்கடங்காமல் போகிறது. ஒரு காலத்தில் நமக்கு ஆக்ஸிஜனாக இருந்த அந்நிய நாட்டுச் செலாவணி, இன்று அதிகப் பணப் புழக்கத்தினால் பொருளாதாரத்தின் மூச்சை இறுக்குகிறது. அதனால் ரிசர்வ் வங்கி, வர்த்தக வங்கிகள் தன்னிடமிருந்து வாங்கும் கடனுக்கு வட்டி விகிதத்தை அதிகரித்தும், ரிசர்வ் வங்கியில் வைக்க வேண்டிய டெபாசிட் தொகையின் அளவை அதிகரித்தும் சுமார் நாற்பதாயிரம் கோடி ரூபாய்ப் பணப் புழக்கத்தை முடக்கியிருக்கிறது! சென்ற நான்கு வருடங்களில் அந்நிய நாட்டு முதலீட்டு நிறுவனங்கள் இந்தியப் பங்குச் சந்தையில் முதலீடு செய்திருக்கும் தொகை சுமார் மூன்று லட்சம் கோடி ரூபாய். இதில் வெறும் நாற்பதாயிரம் கோடியை செயற்கையாக முடக்குவதால் விலைவாசி கட்டுக்குள் வராது!

ஏறும் விலைவாசியைக் கட்டுப்படுத்த நமது பங்கு மார்க்கெட்டில் அன்னிய முதலீட்டு நிறுவனங்கள் முதலீடு செய்வதில் ஒரு கட்டுப்பாடு அவசியம். நாட் டின் தொழில் உற்பத்தியையும், விவசாய உற்பத்தியையும் அதிகரித்து, அதன்மூலம் வாழ்க்கைத் தரம் உயர நடவடிக்கைகள் மேற்கொண்டால் மட்டுமே விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த முடியும்.

- வி.கோபாலன்






2007 மே 13
சர்வஜித் சித்திரை 30
மலர் : 65
இதழ் : 41


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

# குஜராத்: சாம்பலான மனித நேயம்

தமிழகக் காவல்துறை மண்டல ஐ.ஜி. ஒருவர், ஒரு யுக்தியைக் கையாண்டிருக்கிறார். பல்வேறு காவல் நிலையங்களுக்கு, அப் பகுதியைச் சாராத காவல் துறை ஊழியர்களை மாறு வேடத்தில் அனுப்பியிருக்கிறார். அந்த ஊழியர்கள் சில புகார்களை (புனைந்துதான்) அந் நிலையங்களில் பதிவு செய்ய முற்பட்டிருக்கிறார்கள். மூன்று நாட்களில் திரும்பி வந்த அவர்கள், தங்கள் கண்ணீர்க் கதையைத்தான் விவரிக்க வேண்டியிருந்தது! புகார் தர முயன்ற சிலருக்கு வசவு, வேறு பலருக்கு அடி உதை! கடைசியில், பரிசோதனைக்கு உட்பட்ட அத்தனை போலீஸ்காரர்களும் ஆடிப் போய், தாங்கள் இனி ஒருபோதும் அதிகார துஷ்பிரயோகம் செய்வதில்லை என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்!

- இந்த விவரத்தை தமிழக டி.ஜி.பி. முகர்ஜி, தேசிய மனித உரிமைக் கழகம் நடத்திய ஒரு முக்கிய பயிற்சித் திட்டத்தின்போது பகிர்ந்துகொண்டிருக்கிறார்.

காக்கி உடுப்பணிந்து, கையில் லத்திக்கட்டையைத் தூக்கிவிட்டாலே ஆணவமும் முரட்டுத்தனமும் வந்துவிடுகின்றன என்பதை நாம் மீண்டும் மீண்டும் பார்த்து வருகிறோம். இந் நிலையில், காவல் துறையினருடைய தோரணையில் மாற்றங்களைப் புகுத்தத் தமிழகக் காவல்துறை உயர் அதிகாரிகள் எடுத்துவரும் முயற்சிகளையும் பரிசோதனைகளையும் நாம் மனமார வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இதற்கு நேர்மாறான போக்கு குஜராத்தில் காணப்படுகிறது!

ஷொராபுத்தீன் ஷேக் மற்றும் அவர் மனைவி கௌசர் பீ ஆகியோர் காவல் துறையினரால் கொலை செய்யப்பட்டுள்ளனர். கௌசர் கொல்லப்பட்டதுடன், அவர் உடல் எரிக்கப்பட்டு, சாம்பல் வயல்வெளிகளில் தூவப்பட்டிருக்கிறது! இத்தகைய அசுரத்தனமான செயல்களைச் செய்ததோடல்லாமல், கொலை






செய்யப்பட்டவர்கள் தீவிரவாதிகள் என்றும் அவர்கள் என்கவுன்டரில் இறந்து போயினர் என்றும் கதை கட்டியிருக்கிறது போலீஸ்! அதனால் கிடைத்த மீடியா கவனத்தாலும் விளம்பரத்தாலும் மக்கள் மத்தியில் 'ஹீரோ'க்களாக இந்தப் போலீஸார் சித்திரிக்கப்பட்டும் இருக்கின்றனர்.

இந் நிலையில்தான், மாண்டுபோன ஷொராபுத்தீன் ஷேக்குடைய சகோதரர் உச்சநீதிமன்றத்தில் மனுத் தாக்கல் செய்துள்ளார். வழக்கு மீண்டும் திறக்கப்பட்டு, நம்ப முடியாத உண்மைகள் வெளிவந்திருக்கின்றன!

குஜராத் சம்பவம் வெறும் அதிகார துஷ்பிரயோகம் அல்ல; அது திட்டமிட்ட கொலை என்பது தெரிய வந்துள்ளது. சிறுபான்மை இனத்தவர் பேரில் அம் மாநிலக் காவல்துறை காட்டிவரும் ஆழ்ந்த துவேஷத்தின் வெளிப்பாடாக நடந்த இச் சம்பவம் குறித்து இப்போது சி.பி.ஐ விசாரணை கோரப்பட்டு வருகிறது.

இத்தகைய துவேஷமும், சக உயிர்களைத் துச்சமாக எண்ணும் குரூரமும், ஆட்சியாளர்களின் மௌன அங்கீகாரமின்றி வளர்வதும் வெளிப்படுவதும் சாத்தியமில்லை.

பா.ஜ.க. மத்தியில் ஆட்சியில் இருந்தபோது மத துவேஷம் காரணமாக நிகழ்ந்த பல கொடூரக் குற்றங்களைக் கண்டு நாடே நடுங்கியது.

இன்று அதே வகையான குற்றங்கள் பா.ஜ.க. ஆளும் மாநிலங்களில் காவல்துறையினரின் பங்கேற்பு அல்லது ஆதரவுடன் விமரிசையாக நடக்கின்றன.

நரேந்திர மோடி ஆட்சி செய்யும் குஜராத் பொருளாதார ரீதியில் பாய்ந்து முன்னேறியிருக்கலாம்; ஆனால், மனித நேய அடிப்படையில் பார்த்தால் சுடுகாடாகத்தான் இருக்கிறது. மோடி அரசு, சி.பி.ஐ. விசாரணை வேண்டாம் என்று வாதாடுவது, 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்று சொல்வதுபோல் இருக்கிறது.

இந்த நிலை மாற வேண்டுமானால், பாரதிய ஜனதா கட்சி தனது தீவிர ஹிந்து அடிப்படைவாதத்தைக் கைவிட வேண்டும். பிற மத துவேஷத்தை வளர்க்கிற பஜ்ரங் தள், வி.எச்.பி., ஆர்.எஸ்.எஸ். போன்ற அமைப்புகளிடமிருந்து விடுபட்டு, சுதந்திர அரசியல் இயக்கமாகி, சமதர்ம சமுதாயம் என்ற உயர் இலக்கை நோக்கிப் பயணம் செய்ய வேண்டும்.

இல்லாவிடில், அக் கட்சி மெள்ள அழிவதுடன் ''வேற்றுமையில் ஒற்றுமை'' என்னும் இந்தியாவின் ஜீவ கொள்கையின் மீது ரணகாயங்களையும் ஆறாத வடுக்களையும் விட்டுச் செல்லும். ●

# கழுத்து எப்போ வலிக்கும்?

''எதுக்குக் கண் டாக்டர்கிட்ட போற?''

''இப்பவெல்லாம் பக்கத்து வீட்டுக்காரி புதுப்புடைவை கட்டினா கண் உறுத்த மாட்டேங்குது!''

- அம்பை தேவா



''கால் வலிக்குது, கொஞ்சம் பிடிச்சி விடும்மான்னு என் மருமககிட்டே சொன்னது தப்பாப் போச்சு.''

''என்னாச்சி?''

''கழுத்து எப்போ வலிக்கும்னு கேக்கறா?''

- மா. கண்ணன்



''பக்கத்து வீட்டுல என்ன அழுகைச் சத்தம்?''

''ஊர்ல இருந்து வந்துருக்கிற விருந்தாளிங்களும் சேர்ந்து உக்கார்ந்து சீரியல் பார்க்குறாங்க.''

- அம்பை தேவா





''ஏன்யா, அழுகின தக்காளி ஒரு கிலோ அம்பது ரூவாயா?''

''ஆமா! பொதுக் கூட்டத்திலே அதை வீசுற உனக்கு ஐந்நூறு ரூபா குடுக்கறாங்களே...''

- கு. அருணாசலம்

# அன்பே வழி!



கலப்பு மணத்தினால் மட்டுமே சாதி வேற்றுமை அடியோடு ஒழிய முடியும் என்று அறிவாளிகள் எல்லாரும் சொல்கிறார்கள்.

இது உண்மைதான். ஆனால், கல்யாணம் என்னும் காரியத்தில், கல்யாணம் செய்துகொள்கிறவர்களின் விருப்பம் ஒன்று இருக்கிறது.

சாதி வேற்றுமையை ஒழிப்பதற்காக ஆண்களுக்கும் பெண்களுக்கும் கட்டாயக் கல்யாணம் செய்துவைக்க முடியுமா? முடியாது! அப்படிச் செய்வது முன்னேற்றத்தை நோக்கிப் போவதற்குப் பதிலாகக் காட்டுமிராண்டித்தனத்துக்குப் போவதாக முடியும்.

சமூகத்தில் ஆடவரும் பெண்டிரும் பல துறைகளிலும் சரிநிகர் சமானமாகப் பழகுவது அதிகமாக ஆக, கலப்பு மணங்களும் அதிகமாகும்.

திருமணம் செய்துகொள்வதில் யாரும் யாரையும் கட்டாயப்படுத்த முடியாது. ஆனால், கலப்பு மணங்கள் ஏற்படக்கூடிய சூழ்நிலையை உண்டு பண்ணி உதவலாம்.

அந்தச் சூழ்நிலை சாதி வேற்றுமையைப் பற்றி ஓயாமல் பேசுவதாலும், சாதித் துவேஷத்தை வளர்த்து வருவதினாலும் ஏற்பட முடியாது.

கலப்பு மணம் செய்துகொள்கிறவர்களுக்கு உத்தியோகத்தில் சலுகை கொடுப்பதாகச் சொல்வது நகைக்கத்தக்க காரியம். உத்தியோக ஆசை காரணமாகக் கலப்பு மணம் நடந்தால், அந்த மண வாழ்க்கையும் உருப்படாது; உத்தியோகமும் உருப்படாது. தகுதியற்றவர்களே உத்தியோகத்துக்கு வருவார்கள். நிர்வாகம் சீர்கெட்டுக் குட்டிச் சுவராவதுதான் கண்ட பலனாகும்.

சாதி வேற்றுமையை இந்த நாட்டிலிருந்து ஒழிப்பதற்கு காந்தி மகான் காட்டிய அன்பு வழி ஒன்றுதான் தக்க வழியாகும்.

காந்தி மகான் காட்டிய வழியில் நடந்தபடியால் சென்ற முப்பது ஆண்டுகளில் சாதி வேற்றுமை உணர்ச்சி வெகுவாகக் குறைந்துவிட்டிருக்கிறது. சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளில் சாதிக்காத காரியத்தைக் கடந்த முப்பது வருஷங்களில் சாதித்திருக்கிறோம். அதே அன்பு வழியைப் பின்பற்றினால் இன்னும் ஒரு முப்பது வருஷத்தில் சாதி வேற்றுமை நம் நாட்டிலிருந்து அடியோடு மறைந்தே போய்விடும்.

**- கல்கி 1954, ஜனவரி 17 இதழிலிருந்து...**

## அமரர் கல்கி



*டாக்டர் துளசிதாஸ்

# ஒற்றைத் தலைவலியிலிருந்து விடுதலை!

‘‘‘தலை இருக்கிற வரை வலியும் இருக்கத் தான் செய்யும்' என்றார் ஒரு பெரியவர். அது உண்மை தான். ஆனால், தலைவலி களிலேயே மிகவும் கடுமையானதும் தொல்லை தரக்கூடியதும் ஒற்றைத் தலைவலி எனப்படும் மைக்ரெய்ன் (migraine) தான்'' என்கிறார் காது மூக்கு தொண்டை நிபுணரான டாக்டர் துளசிதாஸ். ஒற்றைத் தலைவலி ஏன் ஏற்படுகிறது, அதனால் வரும் விளைவுகளை எப்படிச் சமாளிப்பது என்று நம்மிடம் அனைத்தையும் விவரித்தார் டாக்டர்...

''நம் தலைமைச் செயலகமான தலையின் உள்ளேயும் வெளியேயும் காணப்படும் ஏராளமான தமனிகளிலும் அவற்றின் கிளைகளிலும் ஏற்படும் மாற்றங்களினால் உண்டாவதுதான் ஒற்றைத் தலைவலி எனப்படும் மைக்ரெய்ன்.

இது ஏற்பட பல காரணங்களைச் சொல்லலாம். பரபரப்பு நிறைந்த வாழ்க்கை முறை, அதிக சத்தம், தினசரி நடவடிக்கைகளில் மாற்றம் ஏற்படுதல், எரிச்சலூட்டும் விஷயங்களைச் செய்வது, அதிகப்படியான துக்கம், தூக்கமின்மை எனப் பல்வேறுபட்ட சூழ்நிலைகளால் ஒருவருக்கு ஒற்றைத் தலைவலி வர நேரிடலாம். ஆண்களைவிட இப்பிரச்னை பெண்களுக்கே அதிகமாக வருகிறது. காரணம், மாதவிடாயின் போது சுரக்கும் இயக்குநீர்களின் மாறுபாடு. குழந்தைகளுக்கும் வரும் ஒற்றைத் தலைவலி, பரம்பரையாகவும் வரும் தன்மையுடையது.

சரி, மைக்ரெய்ன் வருவதற்கான அறிகுறிகள் என்ன? தினமும் காலை பத்து டு பன்னிரண்டு என்று நேரம் வைத்துக்கொண்டு வரக்கூடியது இப்பிரச்னை. மேற்கூறிய நேரம் ஓர் உதாரணம்தான். பெரும்பாலும் காலையில் எழுந்ததும் நமக்கு வந்து குட்மார்னிங் சொல்லிவிடும். சிலருக்கு மதியத் தூக்கத்துக்குப் பிறகு வரக்கூடும். அதேபோல் தலையின் இரண்டு பக்கமும் சிலருக்கு வலி இருக்கும். சிறிது சிறிதாக வலி கூடிக்கொண்டே போய், தலை மிகுந்த பாரத்துடன் காணப்படும். சமயங்களில் பார்வை மங்கும். குமட்டல், வாந்தி வரலாம். உடல் உறுப்புகளில் மரத்துப்போன நிலை ஏற்பட்டுவிடவும் வாய்ப்புண்டு. மனத்தில் தேவையில்லாத குழப்பங்கள் குடிகொள்ளவும் கூடும்.

ஒற்றைத் தலைவலியைத்





# உணவுக்கும் ஒற்றைத் தலைவலிக்கும் கூட சம்பந்தம் இருக்கிறது!

தவிர்க்க முதலில் நாம் அதைப் புரிந்து கொள்ள வேண்டும். எந்த நேரத்தில், எந்தச் சூழ்நிலையில் வருகிறது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். அவ்வாறு புரிந்தபின் அத்தகைய சூழல்களைத் தவிர்க்க முயற்சி செய்ய வேண்டும்.

ஒரு வாலிபர் என்னிடம் ஒற்றைத் தலைவலிக்கான சிகிச்சைக்கு வந்தார். ஏராளமான மாத்திரைகள் சாப்பிட்டும் பலனில்லை என்று புலம்பினார். அவரது தினசரி நடவடிக்கைகளைக் கேட்டபோது ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. அதாவது, அன்றாடம் மாலை ஐந்திலிருந்து ஆறு மணி வரை அவர் டென்னிஸ் ஆடுகிறார். அப்போதுதான் அவருக்குத் தலைவலி தொடங்குகிறது. அலுவலகத்திலிருந்து வந்ததும் அதே டென்ஷனோடு வியர்த்து விறுவிறுத்து உடற்பயிற்சி செய்வது போல் டென்னிஸ் ஆட, ஒற்றைத் தலைவலி ஜாலியாக வந்துவிட்டது. 'ஆபீஸ் விட்டு வந்ததும் உடனே டென்னிஸ் ஆடப் போகாமல் உங்களை நன்றாக ரிலாக்ஸ் செய்து கொள்ளுங்கள். மனத்துக்குப் பிடித்த புத்தகம் படியுங்கள், இசையைக் கேளுங்கள். பிறகு நிதானமாக டென்னிஸ் ஆடச் செல்லுங்கள்' என்றேன். அதுபோலவே அந்த நபர் மாற்றம் கொண்டு வர, அதன் பின் இதுவரை அவரை ஒற்றைத் தலைவலி நெருங்கவில்லை.

**உ**ணவுக்கும் ஒற்றைத் தலைவலிக்கும் கூட சம்பந்தம் இருக்கிறது. அளவுக்கதிகமாகச் சாப்பிடுவது நல்லதல்ல. தேவையான அளவை, தேவையான நேரத்தில் சாப்பிடும் வழக்கத்தை ஒற்றைத் தலைவலிக்காரர்கள் கைகொள்ள வேண்டும். சாக்லெட், மீன், இறைச்சி, வெண்ணெய், நெய், தயிர்,வெங்காயம், தக்காளி, எலுமிச்சை ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும். இவற்றில் 'டைரமின்' என்னும் அமிலம் இருக்கின்றது. இது ஒற்றைத் தலைவலியை இருகரம் கூப்பி வரவழைக்கக்கூடியது. டீ, காபியை அறவே தவிர்க்க வேண்டும். புகைப் பழக்கத்தைக் கட்டாயம் விட வேண்டும். அதிலுள்ள நிகோடின் தலைவலியைத் தூண்டக்கூடியது.

இன்னொரு விஷயம் தூக்கம். குறைந்தது தினமும் ஆறு மணி நேர தூக்கம் மிக அவசியம். கவலையில்லாமல் மனத்தை இலேசாக வைத்துக்கொள்ள வேண்டும். நிதானம், பொறுமையைக் கடைபிடிப்பது நல்ல பலனைத் தரும். இதற்கு யோகா, தியானம் போன்றவற்றைச் செய்யலாம்.

இதையெல்லாம் விட அவ்வப்போது உங்கள் மருத்துவரிடம் சென்று ஆலோசனை பெறுவது முக்கியம். அவர்தான் உங்களை வழிநடத்துவார்'' என்கிறார் டாக்டர் துளசிதாஸ்.

- மனோ விக்டர்

படம் : சுந்தரம்

# அழைப்பிதழ் அர்த்தங்கள்!

நண்பன் நாராயணன் வருத்தப்பட்டான். "சில விஷயங்கள் நமக்குத் தெரியறதில்லைடா.."

"உனக்குப் பல விஷயங்கள் தெரியறதில்லை. இந்தத் தடவை என்ன?"

நாராயணன் விவரித்தான். கல்யாணத்துக்கு அழைக்க ஆபீஸ் நண்பர் ஒருத்தர் வந்திருந்தார்.

பெரிய பையிலிருந்த பெரிய சைஸ் எவர்சில்வர் தாம்பாளம் ஒன்றை எடுத்தார். அப்புறம் ஒவ்வொரு ஆப்பிளாக அரை டஜன் ஆப்பிள், ஒரு டஜன் பெரிய சைஸ் வாழைப் பழம், ஒன்பது சாத்துக்குடி, வெற்றிலை பாக்கு, புஷ்பம், கல்கண்டு ஒரு பாக்கெட் எல்லாம். அந்தத் தட்டில் அழகாக வைத்துக் கல்யாணப் பத்திரிகையை அதன்மேல் சிகரம்போல வைத்து, "நில்லுங்கோ. நமஸ்காரம் பண்றோம். குழந்தை கல்யாணத்துக்குப் பெரியவா வந்து ஆசீர்வாதம் பண்ணணும்..." என்று சொன்னார்கள்.

அட்சதையும் அவர்களே கொண்டு வந்திருந்தார்கள். அந்த அள்ளிப்போட்டுத் தம்பதியரை மனசார வாழ்த்தினோம். "நம்ம வீட்டுக் கல்யாணமாச்சே, கட்டாயம் வந்துடறோம்" என்று சொன்னேன்.

மனைவி தாம்பூலத் தட்டுடன் சமையலறைக்குப் போய்விட்டாள்- வந்தவர்களுக்குக் காஃபி கலந்து கொண்டுவர.

சற்று நேரத்தில் காஃபியுடன் வந்தாள். வந்தவர்கள் காஃபி சாப்பிட்டார்கள். உடனே கிளம்ப வேண்டியதுதானே? ஊஹூம்...

"கட்டாயம் வந்துடுங்க..." "மறக்காம வந்துடுங்க" "உங்களை நிச்சயம் எதிர்பார்ப்போம்" "இது உங்க வீட்டுக் கல்யாணம்" "உங்களாட்டம் பெரியவங்க ஆசீர்வாதம் எப்பவும் வேணும்" இந்த மாதிரி உபசார வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு சோபாவில் உட்கார்ந்து கொண்டேயிருந்தார்கள்.

முகத்தில் ஒருவகை அசட்டுச் சிரிப்பு தம்பதியர் முகத்தில்.

அப்புறம்தான் சட்டென்று ஞாபகம் வந்தது. மனைவியிடம் "குங்குமம் கொடு. அவுங்க இன்னும் ரொம்ப வீட்டுக்குப் போகணுமாயிருக்குமே" என்றேன்.

"இதோ!" என்று மனைவி கிழ மான் மாதிரி துள்ளிச் சமையலறைக்குச் சென்று குங்குமம், ஒரு ரவிக்கைத் துண்டு, பாட்டிலில் பல காலம் அடைந்து கிடந்த மஞ்சள் கிழங்கு ப்ளஸ் அவர்கள் வாங்கி வந்த சாத்துக்குடியிலேயே ஒன்று... இவற்றை ஒரு சின்னத் தட்டில் வைத்து நீட்டினாள்.

வந்த அம்மாள் குங்குமம் இட்டுக் கொண்டு வெற்றிலை பாக்கு, ரவிக்கைத் துண்டு, பழம் இவற்றை எடுத்துக் கொண்டாள்.



புறப்பட வேண்டியதுதானே! ஊஹூம். நின்றுகொண்டே, "அப்போ நாங்கள் புறப்படலாமா?" என்றார் ஆபீஸ் நண்பர். "இன்னும் ஏழெட்டு வீடுகள் அழைத்தாகணும்."

"ஆமாம், பாவம். கல்யாணம்னா அலைச்சல்தான். என்னதான் காருன்னாலும் ஏறி இறங்கச் சிரமம்தான். நாங்கள் கட்டாயம் வந்துடறோம்" என்றோம்.

"ரொம்ப சந்தோஷம்" என்றார்கள். "அப்போ நாங்க புறப்படறோம்."

ஒரு கால் வாசலில் டிரைவர் இல்லையோ? 'தம்' அடிக்கவோ, நாஷ்டா பண்ணவோ போயிருப்பானோ?

"எல்லாம் நல்லபடியாக நடக்கும். கவலையே படாதீங்க."

"இன்னும் ஏழெட்டு வீடு அழைக்கப் போகணும்."

"ஆமாம்... ஆமாம்... மணி இப்பவே பன்னெண்டாயிடுத்து."

"அப்போ நாங்க புறப்படறோம்."

**சி**ல பேர் அத்திப் பிசின் மாதிரி 'புறப்படறோம், இதோ புறப்படறோம்'னு சொல்லிக்கொண்டே இருப்பார்களே தவிர, புறப்பட்டுவிட மாட்டார்கள்.

அவர்களைத் துரத்த சிலர் ஒரு டெக்னிக் அனுசரிப்பார்கள். வந்தவர்கள் புறப்படுமுன் தாங்கள் புறப்பட்டு வாசற்படிகிட்டே நின்று கொண்டு விடுவார்கள். வழி அனுப்பத் தயார்நிலையில் தாங்கள் இருப்பதாகக் காட்டிக் கொள்வார்கள்.

நாராயணன் சொன்னார். "நானும் இந்த டெக்னிக்கையெல்லாம் செய்து பார்த்தாச்சு."

சட்டென்று ஞாபகம் வந்தது.

சே! வீட்டுக்கு வந்த விருந்தாளிகளை ஒரு வார்த்தை "நீங்க ஒரு வாய் சாப்பிட்டுப் போகலாமே" என்று உபசரிக்க நமக்கு ஏன் தோணாமல் போச்சு!

"சுரேஷ்!" என்றேன் உற்சாகமாக. "மணி பன்னெண்டாகிறது. காத்தாலே டிபன் சாப்பிட்டுக் கிளம்பினீங்களோ, இல்லை பட்டினியோட கிளம்பினீங்

**பாக்கியம் ராமசாமி**

''எதிரி மன்னரிடம் 'இன்று போய் நாளை வா'ன்னு நம் மன்னர் சொல்லிட்டு வந்திட்டாராமே, அவ்வளவு வீரமா?''

''புடலங்காய், சரண் அடைய இன்னிக்கு நாள் நல்லா இல்லையாம்!''

- வெ.சீதாராமன்



களோ. நம்ம வீட்டிலேயே ஒரு வாய் சாப்பிட்டுவிட்டுக் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துண்டு நீங்கள் மெதுவாக உங்கள் மத்தியான செஷனை வைத்துக்கொள்ள லாம். கார் வெயிட் பண்ணலாமோல் லியோ:?''

"ஐயையோ! எங்க கவின் வீட்டிலே இப்பத்தான் முழுச் சாப்பாடு சாப்பிட்டு வர்றோம். அப்போ நாங்கள் புறப் படறோம். புறப்படலாமில்லையா?'' என்றார் நண்பர்.

நாங்கள் கழுத்தைப் பிடித்துத் தள்ள ணும் என்று நினைக்கிறார்களா? ஒரு கால் அவர்கள் குடும்பக் கலாசாரத்தில், திரு மணத்துக்கு அழைக்கப் போகிறவர்கள் தாங்களாகப் புறப்படலாகாது போலும்.

எவரை அழைக்கப் போகிறார் களோ அவர்கள் இவர்களைக் கல்தா கொடுத்தோ, விறகுக் கட்டையால் ரெண்டு அடி போட்டோ விரட்ட வேண்டும் என்று சம்பிரதாயம் ஏதாவது இருக்குமோ என்னவோ?

இதற்குள் அதிசயம் ஒன்று நடந்தது. வாசலிலிருந்து டிரைவர் - கால் டாக்ஸி போலிருக்கிறது. உரக்க ஹார்ன் அடித்தான்.

"டிரைவருக்கு அவசரம் போலிருக்கு...'' என்றேன்.

"சரி... அப்போ நாங்க புறப்படறோம். மறக்காம வந்துடுங்க... மறக்காம... மறக்காம...''

ஏன் இத்தனை 'மறக்காம' போட றாங்க என்று எரிச்சலாகக்கூட வந்தது.

கைகூப்பி வணங்கி, "நிச்சயம் வந்துட றோம்... கவலைப்படாதீங்க...'' என்று வாசல் படிக்கு நகர்ந்து விடை கொடுத் தோம்.

அப்பவும் பிரிய மனமில்லாமல் திரும் பித் திரும்பிப் பார்த்தவாறு ஒரு வழியாகப் புறப்பட்டார்கள்.

கால் டாக்ஸி புறப்பட்டுத் தெருமுனை திரும்பும்வரை பார்த்து உறுதிப்படுத்திக் கொண்டு வீட்டுக்குள் திரும்பினோம்.

"சே! சே! இந்த ரீதியில் இவர்கள் ஒரொரு வீட்டிலும் தங்கி சாவகாசமாகக் கல்யாணத்துக்கு அழைத்துக்கொண்டு போனால், அழைத்து முடிக்கும் முன் அறுபதாம் கல்யாணமே ஆகிவிடும்!'' என்றேன்.

"சே! சே! நேரத்தின் அருமையே தெரி யாதவங்களா இருக்காங்க. பாவம்! ஆனால் மனப்பூர்வமா பிரியம். இப் படிப்பட்டவங்களை இந்தக் காலத்துலே பார்க்கறது அபூர்வம்!'' என்றவாறு மனைவி சமையலறைக்குப் போனாள்.

போனவள் பதறியடித்து வந்து "ஒரு நிமிஷம் வர்றீங்களா?'' என்றாள்.

போனேன். அங்கே அவர்கள் கொண்டு வந்த எவர்சில்வர் தாம்பாளத் தட்டில், ஆப்பிள்களும், ஆரஞ்சும், வாழைப்பழ டஜனும் 'ஜிலுஜிலு'வென டால் அடித்துக்கொண்டிருந்தன. ●

# தன்னார்வத் தொண்டர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு...

உதவும் கரங்கள் என்ற தொண்டு நிறுவனம் ஆதரவற்ற குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் அடைக்கலம் கொடுத்துக் காப்பாற்றிவருவது குறித்து நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நம்புகிறோம். பொதுமக்களின் நன்கொடையைக் கொண்டு இயங்கிவரும் இந்த அமைப்பு, பெற்றோரால் கைவிடப்பட்ட குழந்தைகள், சமூகத்தால் ஒதுக்கப்பட்ட பெண்கள், முதியவர்கள், மனநலம் பாதிக்கப்பட்டோர், மூளை வளர்ச்சி குறைந்த குழந்தைகள், ஆகிய 1800 பேர் கொண்ட மாபெரும் குடும்பத்தைப் பல ஆண்டுகளாக ஆதரவளித்துக் காப்பாற்றி வருகிறது. இந்த அன்புப் பணியில் ஆர்வத் தொண்டர்களாகச் சேர்ந்து பணியாற்ற உங்களுக்கும் வாய்ப்பு உண்டு.

35 வயது முதல் 50 வயதுக்கு உட்பட்டவர்கள் விண்ணப்பிக்கலாம். உணவும் தங்குவதற்கான வசதியும் கிடைக்கும். அதோடு உதவித்தொகையாக மாதம் ரூ.1,000 அளிக்கப்படும். ஆதரவற்ற மக்களுக்கு அன்புடன் தொண்டாற்றும் ஆர்வமுள்ளவர்கள் தொடர்பு கொள்ளலாம்.

பிள்ளைகளைப் பேணிக் காப்பதற்கு தாய்மார்கள், உடனிருந்து ஆதரவளிப்போர், ஆசிரியர்கள், காவலர்கள், சமையற்காரர்கள், செவிலியர்கள், தோட்டக்காரர்கள், உதவியாளர்கள் ஆகியோருக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும்.
விண்ணப்பங்கள் அனுப்பவேண்டிய முகவரி.

**உதவும் கரங்கள்**
460 என்.எஸ்.கே.நகர்
அரும்பாக்கம், சென்னை 600 106
தொலைபேசி எண்கள் 26216321 26260818
99401 88011



உதவும் கரங்களுக்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு வருமான வரிச்சட்டம் 80 ஜியின் கீழ் வரி விலக்கு உண்டு.

**மேஷம் :** உடல்நலக் குறைவு ஏற்படும். அனாவசியமான செலவுகளுக்கு வழி வகுக்கும். பூர்வீகச் சொத்து கிடைக்கும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் சராசரியான வருமானம் கிட்டும். ஞாபக மறதி ஏற்படும். பண த்தட்டுப்பாடு இருக்கும்.

**ரிஷபம் :** தன விருத்தி ஏற்படும். பெயர், புகழ் உண்டாகும். வேலையில் நல்ல பெயர் ஏற்படும். வருமானப் பெருக்கம் ஏற்படும். ஆரோக்கியக் குறைவு, வேலைப்பளு அதிகரிக்கும். வேலை மாற்றம் உண்டாகும். வியாபாரிகளுக்கு நல்ல காலம்.

**மிதுனம் :** படிப்பில் முன்னேற்றம் உண்டாகும். வாக்குவாதத்தைத் தவிர்க்க வம்பு விலைக்கு வரும். ஜாக்கிரதையாக இருக்கவும். உடல்நலக் குறைவு உண்டாகும். வேலையில் நல்ல பெயர் ஏற்படும். தந்தை மூலம் ஆதாயம் உண்டாகும்.

**துலாம் :** நல்ல தன விருத்தியை அளிக்கும். எடுக்கும் காரியம் கைகூடும். திருமணம் நடக்கும். வாக்கு சாதுர்யம், நாணயம் காப்பாற்றப்படும். மன தைரியத்தை அளிக்கும். மறைமுகமான எதிர்ப்பு, தொல்லைகள் அளிக்கும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை.

**விருச்சிகம் :** எண்ணங்கள் யாவும் ஈடேறும். தாயின் உடல்நிலை குன்றும். வேலையில் எதிர்ப்பு இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படாது. தந்தை மூலம் ஆதாயம் கிட்டும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும்.

# நடக்குமென்பார்;

வும். பண நஷ்டம் உண்டாகும். இறைவனை வழிபடுதல் நல்லது. தந்தையின் உடல்நலம் பாதிக்கும். கடன் தொல்லைகள் இருக்கும்.

**கடகம் :** குடும்ப உறுப்பினர்கள் உடல்நிலை பாதிக்கப்படும். மன தைரியம் குறையும். கணவன், மனைவி பிரச்னை தீரும். வாக்குவாதம் கூடாது. ராசிக்கு 3ல் குரு பார்வை உள்ளதால் சந்தோஷம், சுப காரியம் உண்டாகும். சொத்துகள் வாங்கும் யோகம் கிட்டும்.

**சிம்மம் :** உறவினர்களிடத்தில் நல்ல கௌரவம், மரியாதை உண்டாகும். வீடு, வாசல் வாங்கும் வாய்ப்பு வரும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். குழந்தைகள் வழியில் சுபச்செலவு ஏற்படும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உடன்பிறப்புகளால் சங்கடம் ஏற்படும்.

**கன்னி :** மனதுக்கு சந்தோஷமான நிகழ்ச்சிகள் நடக்கும். நல்ல அந்தஸ்து உண்டாகும். சுபச் செலவுகள் உண்டாகும். லட்சுமி கடாக்ஷம் உண்டாகும். வீண் வெளியூர்ப் பிரயாணம் செய்ய நேரிடும். வேலைப் பளு அதிகரிக்கும். வேலையில் இட மாற்றம் ஏற்படும்.

**தனுசு :** அநாவசியமான செலவுகள் ஏற்படும். எந்தக் காரியத்திலும் போராடி வெற்றி பெறும் சூழ்நிலை உருவாகும். மன தைரியம் கிடைக்கும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். பூமி பிராப்தம் கிட்டும் . கல்வி வளம் மேலோங்கும். கணவன், மனைவி உறவு ஆரோக்கியமாக இருக்கும்.

## ப ர த் வ ா ஜ்

***என் கணவர் தொழிலில் ஈடுபாடு இல்லாமல் இருக்கிறார்... அவர் வெற்றி பெறுவாரா?***

**- எம்.பிரியா, திருச்சி**

உங்கள் கணவருக்கு சூரியதசை நடைபெற்று வருகிறது. 42 வயது வரை எந்த விஷயத்திலும் விரக்தி தோன்றும். ஞாயிறு தோறும் ஈஸ்வரன் கோயில் சென்று விளக்கு




# நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்

**மகரம் :** மன தைரியத்தை உண்டாக்கும். வரும் இடையூறுகளை, வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலில் தைரியம் அதிகம் இருக்கும். கல்வி வளம் சிறப்படையும். லட்சுமி கடாக்ஷம் கிட்டும். மனைவி மூலம் நற்பலன் ஏற்படும். சுபகாரியம் கைகூடும். சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் சுவாமியை வழிபட்டு, ஆஞ்சநேயர் ஸ்லோகம் படித்து வர சிரமங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

**கும்பம் :** மறைமுக எதிர்ப்புகளை வெல்வீர்கள். வேலையில் அதிரடி மாற்றம் ஏற்படும். கணவன், மனைவிக்குள் அனுசரணை தேவை. வாக்குவன்மை மேலோங்கும். உடன்பிறப்பால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகளுக்கு சந்தோஷம் உண்டாகும். சுபகாரியம் நடக்கும். மனைவிக்கு ஆரோக்கியக் குறைவு ஏற்படும். வேலைப்பளு அதிகரிக்கும். வேலை மாற்றம் உண்டாகும்.

**மீனம் :** பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். வீடு / மனை வாங்கும் வாய்ப்புக் கிட்டும். மன பிரம்மை தீரும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வேலையில் மாற்றம் ஏற்படும். தாயின் உடல்நிலையில் சிரமம் கொடுக்கும்.

### ப தி ல் க ள்

ஏற்றி வரவும். கஷ்டங்களில் இருந்து விடுதலை கிடைக்கும்.

***என் பிள்ளைக்கு எப்போது திருமணம் நடக்கும்?***

**- ஆர்.கிருஷ்ணமூர்த்தி, பள்ளிக்கரணை**

உங்கள் மகனுக்கு தற்பொழுது சுக்ர தசை நடைபெற்று வருகிறது. இவருடைய ஜாதகப்படி திருமணம் நடப்பது அரிது.



✱ அந்த செட்டில் சிவாஜி நடனம்...



✱ தோட்டாதரணி

ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளை ஏற்படுத்தியுள்ள ரஜினியின் 'சிவாஜி' படத்துக்காக ஷங்கரின் மெகா கற்பனைகளுக்குத் தம் கலைத் திறமையால் பிரம்மாண்டமான செட்களை உருவாக்கி ரஜினியையே அசத்தி இருக்கிறார் ஆர்ட் டைரக்டர் தோட்டாதரணி. 'சிவாஜி' படத்துக்கு செட்கள் போட்ட அனுபவத்தை நம்மிடம் பிரத்யேகமாக விவரித்தார்...

''நான் ஏற்கெனவே ஷங்கர் இயக்கிய காதலன், இந்தியன், முதல்வன் மற்றும் நாயக் (இந்தி) ஆகிய படங்களுக்கு ஆர்ட் டைரக்டராகப் பணியாற்றி இருக்கிறேன் என்றாலும் ரஜினி, ஷங்கர், ஏவி.எம். காம்பினேஷனில் உருவாகும் சிவாஜியில் பணியாற்றியது பெரிய சவால்தான். காரணம், நான் இதுவரை பணியாற்றிய எல்லாப் படங்களையும் விட பெரிய, அபாரமான கற்பனையுடன் கூடிய செட்களை உருவாக்க வேண்டியிருந்தது. ஹைதராபாத் ராமோஜி ஃபிலிம் சிட்டியில் செட் போட்டேன். ஆசியாவிலயே மிகப்பெரிய படப்பிடிப்புத் தளம் அங்கேதான் இருக்கிறது. ஐம்பது அடி உயரம் கொண்ட அந்தத் தளத்தில் செட் போடுவது அத்தனை சுலபமல்ல. ஷங்கர் 'வாஜி வாஜி சிவாஜி' பாடலுக்காக நான்கு அடுக்கு அரண்மனை செட் போடச் சொன்னார். செட் போடுவதற்கே சுமார் முப்பது நாட்கள் ஆனது. தினமும் நூறு தொழிலாளர்கள் வேலை செய்ய வேண்டி



யிருந்தது. பால்கனியுடன் கூடிய அந்த பாபிலோனிய பாணி அரண்மனை செட்டின் நான்கு அடுக்குகளிலும் சுமார் எண்பது ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்கள் நின்று ஆட வேண்டும் என்பதால், அதற்கேற்ப பலமானதாகவும் இருக்கும்படி கவனமாகச் செய்ய வேண்டி இருந்தது. அந்த செட்டுக்கு பெயிண்ட் அடிப்பதற்கு மட்டுமே அனுபவம் மிகுந்த முப்பது பெயிண்டர்களை நான் சென்னையிலிருந்தே அழைத்துச் சென்றிருந்தேன்.

அந்த செட்டைப் பார்த்த ரஜினி 'இது செட்டா? இல்லை நிஜமான அரண்மனையா?' என்று அசந்துபோனார். அந்த செட்டில் சிவாஜி பாடலை எடுத்து முடித்தார் ஷங்கர். மறு நாள் காலை படப்பிடிப்புக்கு வந்த ரஜினிக்கு அங்கே ஒரு இனிய ஷாக் காத்திருந்தது. நான்கு அடுக்கு அரண்மனை எதிரில் சிறிதாக ஓர் அழகிய குளியல் தொட்டி என்று இருந்த செட், மறுநாள் காலை ஒரு கலைநயம் மிக்க படுக்கை அறையாக மாறி இருந்தது. 'அதற்குப் பின்னால் சுமார் ஐம்பது தொழிலாளர்களின் இரவு நேர உழைப்பு இருக்கிறது' என்று அதிசயப்பட்டவர்களுக்கு பதில் சொன்னேன்.

ராமோஜி ஃபிலிம் சிட்டியில் இதுவரை இவ்வளவு பிரம்மாண்டமான செட் நிர்மாணிக்கப்பட்டதே இல்லை. ராமோஜி ராவே, ''இந்த செட்டில் படப்பிடிப்பு முடிந்த பிறகு, உடனடியாக செட்டைக் கலைத்துவிட வேண்டாம். எங்கள் நிர்வாகக் குழுவினரின் மீட்டிங் நடக்க இருக்கிறது. அதற்கு வரும் அனைத்து நிர்வாக போர்டு இயக்குநர்களும் இந்த செட்டை கண்டிப்பாகப் பார்க்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

# ரஜினியே வியந்த இன்ஜினீயரிங் அதிசயம்!

இது ஒரு மாதிரியான சவால் என்றால், 'சகானா' பாடலுக்கு முற்றிலும் புதுமையாக - கண்ணாடியிலேயே ஒரு செட் போட்டது வேறு வகையான சவால். பிரமிட், அரைக்கோளம், கனச் சதுரம் என மூன்று வெவ்வேறு வடிவங்களில் அமைந்த அந்த செட்டின் அளவு இருநூறுக்கு நூற்று முப்பது அடி. உயரம் ஐம்பது அடி. தரையிலிருந்து சுமார் இருபது அடி வரை கண்ணாடி, அதற்கு மேல் அக்ரலிக் ஷீட் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட அந்த செட்டை இன்ஜினீயரிங் அதிசயம் என்றால் மிகையில்லை. இந்த செட்டை அமைக்க நாற்பது நாட்களாகும் என்று திட்டமிட்டிருந்தோம். ஆனால், இருபத்தைந்து நாட்களுக்குள் அமைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. முதல் நாள் படப்பிடிப்பின்போது, செட்டுக்கு வந்த ரஜினி 'பியூட்டிஃபுல் செட்' என்று வியந்துபோனார். திடீரென்று அறுபது அடி உயரத்திலிருந்து அருவியாகத் தண்ணீர் கொட்ட ஆரம்



# 'சிவாஜி' தள்ளிப் போவது ஏன்?

தமிழ்ப் புத்தாண்டுக்கு ரிலீசாகும் என்று பரபரப்புடன் எதிர்பார்க்கப்பட்ட ரஜினியின் 'சிவாஜி' மே முதல் வாரம் வெளியாகும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அதுவும் நடக்க வில்லை. "எப்போ ரிலீஸ்?" என்று ஏவி.எம்., ஷங்கர், ரஜினி என்று எந்த வட்டாரத்தில் கேட்டாலும் மௌனமே பதிலாக வரு கிறது.. சரி, எதனால்தான் இந்தத் தாமதம்?

படத்தின் ஷூட்டிங் முடிந்துவிட்டாலும் பின்னணி இசை சேர்க்கும் வேலை பாக்கி இருக்கிறதாம். ஆனால், சிவாஜி யூனிட்டின் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி ஏ.ஆர்.ரஹ்மா னால் பின்னணி இசையை முடித்துத் தருவதில்தான் சிக்கல். அவர் லண்டனில் சேகர் கபூரின் படத்தில் பிசியாக இருக் கிறார். அந்த வேலை நடப்பது லண்டனில். அந்த வேலைக்கு இடையில், இரவில் நேரம் கிடைக்கும்போதெல்லாம் ரஹ்மான், ஷங்கர் படத்தின் வேலையையும் கவனித் துக்கொண்டு தான் இருக்கிறார். ஆனாலும் வேலை முடிந்த பாடில்லை. ஷங்கர் தரப்பில் விசாரிக்கும் போதெல்லாம், 'சேகர் கபூருடன் காண்ட்ராக்டில் இருப்பதால், இடையில் அதை நிறுத்தி வைத்துவிட்டு வேறு வேலை பார்க்க முடியாது' என்று விளக்கம் சொல்லப்படுகிறதாம்!

ஷங்கர் மற்றும் ஏவி.எம். தரப்பில் ரஹ்மானிடம், 'பாடல்களை சூப்பராக போட்டுக் கொடுத்ததற்கு நன்றி. பின்னணி இசைக்கு லோக்கலாக சபேஷ் - முரளியைப் போட்டு வேலையை முடித் துக் கொள்கிறோம்' என்று சொன்னால், ரஹ்மான் கோபித்துக் கொள்வாரோ என்று தயக்கம். ரஹ்மான் தரப்பிலோ, "நான் பிசி. வேறு யாரையாவது வைத்துப் பண்ணிக் கொள்ளுங்கள்" என்று சொல்லத் தயக் கம். நிலைமையைப் புரிந்து கொண்டு ரஹ்மானே, நாலு நாட்கள் லண்டனி லிருந்து சென்னை வந்து பின்னணி இசை வேலை யில் ஈடுபட்டதாகவும் ஒரு ரகசியத் தகவல். படம் மே மாதம் முதல் வாரத்தில் சென்சாருக்குப் போய் விடும் என்று எதிர்பார்க்கிறார்கள். வழக்கத்தைவிட மிக அதிக எண்ணிக்கையில் பிரிண்ட்டுகள் போட வேண்டும் என்பதால், அதற்கும் போதிய அவகாசம் வேண்டும். இப் போதுள்ள நிலவரப்படி மே மாதம் பத்தொன்பதாம் தேதி சிவாஜி ரிலீஸ் ஆகும் என்று தெரிகிறது.

பித்தவுடன் 'இந்த செட்டே பிரமாதம்னு நினைச்சா, இதுக்கு மேல ஒரு அருவியா?' என்று ரஜினியும் மற்றவர்களும் வாயடைத் துப் போனார்கள்.

பின்னி மில் வளாகத்தில் ஒரு பெரிய சுவரில் முப்பதுக்கு நாற்பது அடி அளவில் மைக்கேல் ஆஞ்சலோ பாணி ஓவியப் பின்னணி ஒன்றை உருவாக்கிப் படம் பிடித்ததும் மிக அற்புதமாக இருந்தது. ஷ்ரேயா ஒரு பல்லக்கில் வரும் காட்சிக்காக எளிமையாக, ஆனால் வெகு அழகான ஒரு ஸ்டூடியோவிலேயே இசைக் கருவிகள் கடை மற்றும் அதன் குடோன் செட் போட்டேன்" என்று விரிவாகப் பேசிய தோட்டாதரணியிடம், "சரி, சிவாஜியின் கதைதான் என்ன?" என்று கேட்க, "அது மட்டும் எனக்குத் தெரியாது!" என்று சூப்பராக நழுவினார்.

– எஸ்.சந்திரமௌலி

# சரோஜா வைத்யநாத ஐயர் பரம்பரை ஜோதிடர்

ஜோதிடத்தில் 50 வருட அனுபவம் கொண்ட
"ஜோதிட வாணி"
**ஸ்ரீமதி சரோஜா வைத்யநாத ஸ்வாமி ஐயர்**
கைரேகை, ஜாதகம், நியூமராலஜி, வாஸ்து, சாமுத்ரிகா லக்ஷணம், திருமணப் பொருத்தம், அனைத்தும் பார்க்கப்படும்.
அனைத்து ஆலோசனைகளும் வழங்கப்படும்.

*வெளியூரில் வசிப்பவர்கள் அதிகபட்சமாக 5 கேள்விகள் வரை கேட்க ரூ.500/- கட்டணத்தை முன்னதாகவே அனுப்பவும்.*

V.சரோஜா, 45/18, ஸ்ரீநிவாச ஐயர் தெரு, மேற்கு மாம்பலம்,
அயோத்யா மண்டபம் அருகில்,
பிள்ளையார்கோவில் அருகில் உள்ள தெரு.
**Ph: 23716892, Cell: 9444230523, 9444684006, 9444506218**

# WANTED

| | | | |
|---|---|---|---|
| 1. | ARCHAKAR<br>TENKALE - PANCHARATRA<br>FULL TIME | Agama, Below 60,<br>2 years Experience | Rs.5000/- per month |
| 2. | PARICHARAKAR<br>FULL TIME | 10th Std, Below 50<br>5 years Exp., | Rs.3000/- per month |
| 3. | OFFICE ASST / CUM HOUSE KEEPING | 10, +2 Dip in H.K.<br>2 years Exp., Below 50 | Rs.2500/- per month |
| 4. | SECURITY<br>FULL TIME | PUC, Below 50,<br>5 years Exp., | Rs.2000/- per month |

**Send your Bio - data, Contact No.on or before 15.5.2007**

**To**

**Sri Sri Sri Satakopa Ramanuja Jeeyar,**
**Sri Manavala Mamunigal Jeeyar Madam**
**New.15 (old 49) P.P. Melamada Veethi, Srivilliputtur - 626 125**

# ஓய்வுக்கு

மேற்கு இந்தியத் தீவு அணிகளோடு ஆட்டம்! எப்படியாவது லாரா விக்கெட் விழுந்தால்போதும் என்று நகத்தைத் தெரியாமல் விழுங்கிக் கொண்டிருப்போம். ஆஸ்திரேலியாவுடனான மேட்ச் என்றால், அய்யனார் மாதிரி அந்த அணியை அரணாகக் காப்பார் மெக்ராத். பாகிஸ்தான் என்றால், கேட்கவே வேண்டாம். இன்ஸமாம் மூன்று ஸ்டம்புகளையும் மறைத்துக்கொண்டு ஆடுவது நடுக்கத்தை உண்டு பண்ணும். மீண்டும் இவர்கள் ஆட்டத்தைப் பார்க்க வேண்டுமென்றால் பழைய மேட்சுகளைப் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். மைதானத்தில் இவர்கள் நிழல்கூட இனி விழாது.

உலகக் கோப்பையை இழுத்து மூடுகிற சமயம், வரிசையாக ஒவ்வொரு வீரராக ஓய்வு பெறுவது வாடிக்கை. விளக்கு அணையும்போது பிரகாசமாக எரிவது போல வாழ்க்கையின் கடைசி ஆசையாக வண்ணமயமான உலகக் கோப்பையில் ஆடவே எல்லா கிரிக்கெட் அங்கிள்களும் விரும்புகிறார்கள். நம் அனில் கும்ப்ளே அப்படியோர் ஆசையில்தான் வெஸ்ட் இண்டீஸ் சென்றார். ஒரே ஒரு மேட்ச்சில் மட்டும் ஆடினார். ஆசைகளையும், ரன்களையும் கட்டுப்படுத்த முடியாமல் இப்போது ரிட்டையராகி விட்டார்.

மற்ற துறைகளில் நாற்பது வயதைக் கடக்காதவர்கள் இளைஞர்கள். முப்பத்தைந்து வயதைக் கடந்த ஒரு புதிய சினிமா இயக்குநருக்கு 'நாளைய நம்பிக்கை' என்கிற பட்டம் சூட்டப்படுகிறது. கிரிக்கெட்டில் மட்டும்தான் முப்பத்தைந்து வயது. பாழ் வயது! 'ஓய்! ஓய்வைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?' என்று ஊசி குத்திக்கொண்டே பேட்டியாளர்கள் கேள்வி கேட்க ஆரம்பித்துவிடுவார்கள். ஏன் இவ்வளவு சீக்கிரம் ரிட்டையர்மென்ட் என்கிற கேள்வியைத்தான் ஒவ்வொரு கிரிக்கெட் வீரரும் தன் கடைசிக் காலத்தில் கேட்க ஆசைப்படுகிறார்கள். 'இன்னுமா ரிட்டையர் ஆகலை?' என்று கெக்கலித்து, கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவது



✱ லாரா

✱ மெக்ராத்

அவமானம். இந்தியாவில் 'ஏன் இவ்வளவு சீக்கிரம்?' என்கிற கேள்வி கபில்தேவ், ஜகவல் ஸ்ரீநாத் இருவருக்கும் மட்டுமே கேட்கப்பட்டது. கழுத்தில் நிறைய பேருக்குக் கைவைக்கப்பட்டிருக்கிறது.

**வ**யது மட்டுமே தனிக் காரணமல்ல. புற்றுநோயால் அவதிப்படும் மனைவியை அவர் தலைமாட்டுக்கு அருகே இருந்து கவனித்துக்கொள்வதற்காக டாட்டா காட்டியிருக்கிறார் மெக்ராத். டென்னிஸ் லில்லி போல முதுகுவலியைக் காரணம் காட்டி நிறைய பேர் விடைபெற்றிருக்கிறார்கள். விரக்தியினால்கூட ரிட்டையர் ஆவதும் அடிக்கடி நடக்கும். அண்மையில், தென்னாப்பிரிக்க அணியின் புதிய ஸ்பின்னரான நிக்கி போயே, 'அப்போ நான் உங்களுக்கு அவசியமில்லை' என்று கோபித்தபடியே கடுதாசி கொடுத்துவிட்டார்.

கிரிக்கெட்டர்கள் ரிட்டையரான பிறகுதான் லக்ஷ்மி கடாட்சம்! இந்திய அணியில் இடம் கிடைத்த அடுத்த அரை நொடியில் இண்டியன் ஏர்லைன்ஸோ, பாரத் பெட்ரோலியமோ முந்திக்கொண்டு வேலை வழங்கிவிடும். டோனியின் வீட்டைப்போல நீச்சல் குளம் உடைய சௌக்கியமான வீடு கட்டுமளவுக்கு பின்னர் வசதி கிடைக்கும். முப்பது வயதில் ரிட்டையர் ஆனாலும் சௌகர்யம் குறையாது. எல்.கே.ஜி. குழந்தைகள் முதல் பதின்பருவத்தினர் வரைக்கும் பயிற்சி கொடுக்கலாம்; கிரிக்கெட் அகாடமி அமைக்கலாம்; எல்லாம் நல்ல வரும்படி! அது மட்டுமா? சேனல்களில் (அதிர்ஷ்டம் இருந்தால் மந்திரா பேடியுடன்) ஓயாது பேசச் சொல்வார்கள். பிட்சை ரெண்டு கொட்டி கொட்டி ஏதாவது சொல்லி வைக்கலாம். 'கிரிக்கெட் எக்ஸ்பெர்ட்' என்கிற பட்டமெல்லாம் அப்போது கொடுப்பார்கள்.



* இன்ஸமாம்

# மரியாதை!

'பென்ஷன்' இந்த ஒரு வார்த்தையிலேயே எவ்வளவு பாதுகாப்பு உணர்ச்சி இருக்கிறது. பிதுங்கிக் கிடக்கும் பணத்தை முறையாக கிரிக்கெட் வளர்ச்சிக்காக செலவு செய்யத் தெரியாத பி.சி.சி.ஐ., ஒரு வழியாக 'சரி, எதுக்குத் தேவையில்லாம டாக்ஸ் கட்டணும்? இருக்கிற காசை உருப்படியா செலவு பண்ணுவோம்' என்று முன்னாள் வீரர்களுக்கான ஒரு பென்ஷன் ஸ்கீமை ஆரம்பித்துள்ளது. சாஃப்ட்வேர் இன்ஜினியர்போல மாதம் முப்பத்தைந்து ரூபாயை பென்ஷனாக் கொடுக்கிறது. நலிந்துபோனவர் என்று கிரிக்கெட்டில் யாரையும் கைகாட்ட முடிவதில்லை.

சாஃப்ட்வேர் வேலை, பிஸினஸ் எல்லாம் எதற்கு? பேசாமல் நாமும் ஒரு கிரிக்கெட்டராகி சீக்கிரம் ஓய்வு பெற்றுவிடலாம். ஒரு கட்டத்துக்குப் பிறகு ஓய்வுபெற்றவர், ஆடிக்கொண்டிருப்பவர் இருவரும் ஒரே மாதிரியாகிவிடுகிற அதிசயம்தான் கிரிக்கெட்டில் இப்போது நடந்துகொண்டிருக்கிறது.

**- ச.ந.கண்ணன்**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி அறிவிப்பு 2007



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

**விதிமுறைகள் :**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை யென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தரவேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறு கதைப் போட்டி - 2007'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய

**முதல் பரிசு ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு ரூ.5,000/-**

முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 32**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் **ஆகஸ்ட் 6** ஆண்டு மலரில் வெளியாகும். படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**

**வாரம் ஒரு பாசுரம்**

**சுஜாதா**

**30**



# குப்பாயம்

சில பேருடைய பார்வை அப்படி, ஒரு தடவை பார்த்தால் போதும்; நம்மை ஒரு மானசிகக் கயிறு போட்டு இழுத்துவிடும். அந்தப் பார்வைக்கு மயங்கி, பார்த்தவர் பின்னால் கட்டுண்டதுபோல செல்லத் தூண்டும். கண்ணின் பார்வை அந்த வகை.

திவ்யப் பிரபந்தத்தில் எந்தப் பாடலை எடுத்துக் கொண்டாலும் அதில் ஒரு புதிய சொல்லைக் கற்றுக்கொள்ளலாம். குப்பாயம் என்றால் சட்டை. திருவரங்கத்தில் மார்கழி மாதம் முத்தங்கி, ரத்னங்கி என்று இரண்டு சேவைகள் உண்டு. முத்தாலே செய்த அங்கியை அணிந்து ஆண்டுக்கு ஒருமுறை கிடைக்கும் அரிய தரிசனம். 'கடல் நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு உடல் எனக்கு உருகும்' என்று தொண்டரடிப் பொடியாழ்வார் இதைப் பார்த்து உருகியிருக்கிறார். ஆண்டாளுக்கு எல்லாமே கண்ணன்தான். கண்ணன் முத்துப் பதித்த சட்டை அணிந்து ஒரு யானைக்குட்டி போல

வேர்க்க விறுவிறுக்க விளையாடும் காட்சியைப் பார்த்ததாக ஆண்டாள் சொல்கிறாள்.

'கார்த்தண் கமலக் கண் என்னும்
நெடுங் கயிறு படுத்தி என்னை
ஈர்த்துக் கொண்டு விளையாடும்
ஈசன் தன்னைக் கண்டீரோ?
போர்த்த முத்தின் குப்பாயப்
புகர்மால் யானைக் கன்றேபோல்
வேர்த்து நின்று விளையாட
விருந்தாவனத்தே கண்டோமே.'

(கார்த்தண் - மேகம் போல குளிர்ந்த, குப்பாயம் - சட்டை, புகர்மால் யானை - புள்ளிகளுடைய யானை)

குளிர்மேகம் போன்ற, தாமரை போன்ற கண்கள் என்னும் கயிற்றால் என்னை இழுத்துக்கொண்ட திருமாலைப் பார்த்தீர்களா? முத்துச் சட்டை போர்த்தி குட்டி யானைபோல வேர்த்து விளையாடுவதை பிருந்தாவனத்தில் நாங்கள் எல்லாம் பார்த்தோமே.

ஆண்டாளது அபாரக் கற்பனைத் திறன் பிருந்தாவனத்தை நூற்றாண்டுகள் கடந்து கண்ணனின் விளையாட்டும் வேர்வையுமாக நம் கண் முன்னே நிறுத்த வல்லது.

(படிக்கலாம்)

**முத்துச் சட்டை போர்த்தி குட்டி யானைபோல வேர்த்து விளையாடுவதை பிருந்தாவனத்தில் நாங்கள் எல்லாம் பார்த்தோமே**



# போதுமென்ற மனமே...

தேவை என்று ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு விட்டோமானால் அப்புறம் அதைப் பூர்த்தி செய்துகொள்ளும் ஓயாத பிரயாசை ஏற்படத்தான் செய்கிறது. இது திருப்திக்கும் சாந்திக்கும் பக்கம்தான். போதுமென்ற மனமே பொன்னான திருப்தியைத் தருவது. சமீபகாலம் வரை படாடோப (luxury) வஸ்துக்களாக இருந்த ரேடியோ, ஃபேன் மாதிரியானவற்றைக்கூட இப்போது அவசியமாக்கிக் கொண்டு (necessaries), இவை கிடைக்கவில்லையே என்று தாபப்படுவதும், அதிருப்திப்படுவதுமாக இருக்கிறார்கள். தேவையை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகப்படுத்திக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு சாந்தி குறையும்; சௌக்கியம் குறையும். நிம்மதியும் திருப்தியும் குறை யும். தரித்திரம், துக்கம் உண்டாகும். Standard of living என்பதை 'வாழ்க்கைத் தரம்' என்று மொழிபெயர்ப்பதே சரியல்ல. 'வாழ்க்கைத் தரம்' என்பது மிகவும் உயர்ந்த விஷயம். நல்ல குணங்களுடன், ஈசுவர பக்தியுடன் வாழ்கிற வாழ்வே 'தரமான' வாழ்வு. வாழ்க்கைத் தரத்தை Quality of life என்று சொல்ல வேண்டும். தற்போது பொருளாதாரத் தேவைகளை அதிகமாக்கிக் கொண்டே போவதைத்தான் 'வாழ்க்கைத் தரம்' என்கிறார்கள். இதைவிட மனசினால் உயர்ந்து, வாஸ்தவமாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்வதைத்தான் பெரிதாக எண்ண வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**



## அருள்வாக்கு

என். சொக்கன்

# ஆப்பிள் திருட்டு!

எழுபதுகளின் மத்தியில் இந்தியாவுக்கு ஹிப்பியாக வந்து, பனாரஸில் திரிந்து கொண்டிருந்த ஒருவர், அமெரிக்காவுக்குத் திரும்பிச் சென்று, புதுவிதமான கம்ப்யூட்டர்களைத் தயாரித்து உலகப் புகழடைந்தார். டாலர்களாகச் சம்பாதித்துக் குவித்தார்.

அவருடைய பெயர், ஸ்டீவ் ஜாப்ஸ் (Steve Jobs). அவர் தொடங்கிய 'ஆப்பிள்' நிறுவனம், மிகப்பெரிய கணினி கம்பெனி. இதன் சூப்பர்ஹிட் தயாரிப்பு மேக் என்கிற மேகின்டோஷ் (Macintosh) வகைக் கணினிகள்.

'மேக்' பர்சனல் கம்ப்யூட்டர்களின் தயாரிப்பு, விற்பனையில் முக்கியப் பங்காற்றிய ஸ்டீவ் ஜாப்ஸ்தான், 'நாங்கள் உருவாக்கிய ஆபரேட்டிங் சிஸ்டத்தின் சில முக்கியமான அம்சங்களை, மைக்ரோசாஃப்ட் காப்பியடித்து விட்டது' என்று பகிரங்கமாகக் குற்றம் சாட்டினார். வெறுமனே சொல்வதோடு நிறுத்திக்கொள்ளாமல், மைக்ரோசாஃப்ட் மீது நீதிமன்றத்தில் வழக்கும் தொடர்ந்துவிட்டார்.



விண்டோஸ் பிறப்பதற்கு முன்பாகவே, மேகின்டோஷ் தனது கணினிகளைச் சந்தையில் அறிமுகம் செய்துவிட்டது. நல்ல வரவேற்பைப் பெற்றுக்கொண்டிருந்த இந்தக் கணினிகளைப் பார்த்து காப்பியடித்துதான், மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் உருவாக்கப்பட்டதாகக் குற்றம் சாட்டினார் ஸ்டீவ் ஜாப்ஸ்.

இத்தனைக்கும் பில் கேட்ஸ், ஸ்டீவ் ஜாப்ஸ் இருவரும் ஒரு காலத்தில் நல்ல சிநேகிதர்களாக இருந்தவர்கள். ஆப்பிள் கம்ப்யூட்டர்களுக்குத் தேவையான மென்



* ஸ்டீவ் ஜாப்ஸ்

# முதல்வன் 17

பொருள்களை மைக்ரோசாஃப்ட் உருவாக்கித் தந்திருக்கிறது.

தங்களுக்குள் தனிப்பட்ட முறையிலும், பிஸினஸ் ரீதியிலும் இருந்து வந்த இந்த நட்பை, பில் கேட்ஸ் தவறாகப் பயன்படுத்திக் கொண்டுவிட்டார் என்றார் ஸ்டீவ் ஜாப்ஸ்.

இதற்கேற்ப 1981ம் ஆண்டில், மேகின்டோஷ் கணினிகள் உருவாகிக் கொண்டிருந்தபோது, அவற்றுக்குத் தேவையான சில மென்பொருள்களை எழுதும் பணியில் மைக்ரோசாஃப்ட் ஈடுபட்டிருந்தது. ஆகவே, மேகின்டோஷ் பற்றிய பல உள் விவரங்கள் பில் கேட்ஸுக்குத் தெரிந்திருக்க வாய்ப்புகள் உண்டு.

குறிப்பாக, விண்டோஸில் அப்போது புதிதாக அறிமுகமாகியிருந்த 'ஒரு விண்டோஸ் மீது இன்னொன்றைப் படிய வைக்கிற' (Overlapping Windows) சமாசாரம், தங்களுடைய தனிச் சொத்து என்று பிடிவாதம் பிடித்தது மேகின்டோஷ். அந்தத் தொழில்நுட்ப வடிவமைப்பை மைக்ரோசாஃப்ட் பயன்படுத்துவதை அவர்கள் ஏற்க மறுத்தார்கள்.

ஸ்டீவ் ஜாப்ஸ் சொல்வது உண்மைதானா? நிஜமாகவே பில் கேட்ஸ் மேகின்டோஷைப் பார்த்து காப்பியடித்தாரா?

இந்தக் கேள்விக்கு நேர்மையான பதில் வேண்டுமென்றால், இரண்டு பேரும் உண்மையற்றவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ஸ்டீவ் ஜாப்ஸின் மேகின்டோஷ், பில் கேட்ஸின் விண்டோஸ் ஆகிய இரண்டுமே உண்மையான ஒரிஜினல் இல்லை. PARC (Palo Alto Research Center) என்ற வேறோர் ஆராய்ச்சி நிறுவனத்திலிருந்து சுடப்பட்டவைதான்.

அமெரிக்காவின் புகழ்பெற்ற 'ஜெராக்ஸ்' நிறுவனத்தின் ஆராய்ச்சிப் பிரிவுதான் PARC. 1970ல் தொடங்கப்பட்ட இந்தத் துணை நிறுவனம், எலக்ட்ரானிக்ஸ், கணினித் துறை சார்ந்த பல்வேறு ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. ஆனால், இப்படிக் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த விஷயங்களையெல்லம் அவர்களால் வணிக ரீதியில் வெற்றிபெறச் செய்ய முடியவில்லை. ஆகவே, இவர்களுடைய உழைப்புகளையெல்லாம் மற்ற சில புத்திசாலி 'பிஸினஸ்' புள்ளிகள் பயன்படுத்திக் கொண்டார்கள்.

உதாரணமாக, கணினிகளை வெறும் எழுத்து வடிவக் கட்டளைகளின் மூலம் இயக்காமல், சில பொம்மைகளைக் கொண்டு எல்லோரும் சுலபமாகப் பயன்படுத்தும்படிச் செய்யலாம் என்று முதன் முதலாகக் கண்டறிந்தது ஜெராக்ஸ் PARC நிறுவனம்தான். ஆனால், புரட்சிகரமான இந்தக் கண்டுபிடிப்பைப் பயன்படுத்தி ஒரு சிறந்த கம்ப்யூட்டரை அவர்களால் உருவாக்க முடியவில்லை.

இங்கேதான் ஸ்டீவ் ஜாப்ஸ் வருகிறார். GUI (Graphical User Interface) என்ற இந்தத் தொழில்நுட்பத்தை எப்படி வணிக ரீதியில் பயன்படுத்தலாம் என்று யோசித்த அவர்,

தன்னுடைய மேகின்டோஷ் கணினிகளை இதன் அடிப்படையில் வடிவமைத்தார்.

அதாவது, GUI சமாசாரத்தைக் கண்டறிந்தது PARCஆக இருக்கலாம். ஆனால், சந்தைக்கு அதனை முதன் முறையாக அறிமுகப்படுத்தியது ஸ்டீவ் ஜாப்ஸ்தான். பின்னர் இதே தொழில் நுட்பத்தை பில்கேட்ஸின் விண்டோஸும் லேசாக உருவிக்கொண்டது.

விண்டோஸுக்குக் கிட்டத்தட்ட ஒரு வருடம் முன்னதாகவே மேகின்டோஷ் கணினிகள் அறிமுகமாகிவிட்டன. ஆகவே, ஸ்டீவ் ஜாப்ஸ் தொடர்ந்த இந்த 'காப்பி' வழக்கின் தீர்ப்பு, மைக்ரோசாஃப்டுக்குச் சாதகமாக அமையவில்லை.



உலகம் முழுக்க மைக்ரோ சா:.ப்டுக்குச் சம்பளம் வாங்காத விற்பனைப் பிரதிந்திகள் கிடைத்து விட்டார்கள்!

ஆனால், பில் கேட்ஸ் இதைப் பற்றிப் பெரிதாக அலட்டிக்கொள்ளவே இல்லை. 'ஆப்பிள்' நிறுவனத்துடன் சட்டப்படி ஒப்பந்தம் செய்துகொண்டு, அவர்களுக்குத் தர வேண்டிய உரிமத் தொகையைக் கொடுத்துவிட்டார். இதனால், பழையபடி விண்டோஸின் வெற்றிப் பயணம் தொடர்ந்தது.

1990 ஆண்டு, விண்டோஸின் மூன்றாவது வடிவம் (Microsoft Windows 3.0) வெளியாகிப் பெரிய வெற்றியடைந்தது. கம்ப்யூட்டர் என்றாலே, அதில் 'விண்டோஸ்' இருந்தாக வேண்டும் என்கிற கருத்து பரவலாகத் தொடங்கியது.

இதனால், விண்டோஸ் 3.0 அறிமுகமாகி முதல் இரண்டு வருடங்களுக்குள், கிட்டத்தட்ட ஒரு கோடிப் பிரதிகளுக்கு மேல் விற்பனையானது. மைக்ரோசாஃப்டுக்கு வருமானம் கொட்ட, அதன் நிறுவனரும், முக்கியப் பங்குதாரருமான பில் கேட்ஸுக்கும் பணம் கணக்கின்றிக் குவிந்தது.

பணம் ஒரு பக்கமிருக்க, 'விண்டோஸ் 3.0'வின் அபார வெற்றியால் ஆபரேட்டிங் சிஸ்டத்துக்கான சந்தையில் மைக்ரோசாஃப்ட் விண்டோஸ் உட்கார்ந்திருக்கிறது. அதுதானே முக்கியம்?

இந்தக் கோடி கம்ப்யூட்டர்களையும் பயன்படுத்துகிறவர்களுக்கு விண்டோஸின் சவுகர்யமான வடிவமைப்பு சீக்கிரத்தில் பழகிவிடும். மற்ற ஆபரேட்டிங் சிஸ்டங்கள் என்னதான் பிரமாதமாகச் செயல்பட்டாலும், அவற்றைப் புழுவைப்போலப் பார்க்கத் தொடங்கிவிடுவார்கள். அதன் பிறகு, இவர்கள் வாழ்நாள் முழுக்க விண்டோஸ் மட்டும்தான் பயன்படுத்துவார்கள். இவர்கள் எந்த நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்தாலும், அங்கே விண்டோஸ்தான் ஆட்சி செய்யும். இந்தச் சோம்பேறித்தனமான போதைக்குப் புத்தி பழகிவிட்டால், பின்னர் வேறெதையும் அவர்களால் தொட்டுப் பார்க்கக்கூட முடியாது. க்ளிக் செய்ய பொம்மை இல்லாவிட்டால், கைகாலெல்லாம் உதற ஆரம்பித்துவிடும்.

இப்படி உலகம் முழுக்க மைக்ரோசாஃப்டுக்குச் சம்பளம் வாங்காத விற்பனைப் பிரதிநிதிகள் கிடைத்துவிட்டார்கள் என்பதைப் புரிந்துகொண்டார் பில் கேட்ஸ். இவர்கள் எல்லோருடைய முதுகிலும் கை ஊன்றி, மைக்ரோசாஃப்ட் அதிவேகத்தில் மேல் நோக்கிப் பாயத் தொடங்கியது.

(தொடரும்)




# வாருங்கள் வாசகர்களே!....








வணக்கம்.

அறுபத்தைந்து வருடங்களாகத் தமிழ் மக்கள் மனத்தில் நீங்கா இடம் பிடித்திருக்கும் கல்கி, காலத்துக்கேற்ப தன்னைப் புதுப்பித்துக் கொண்டே வருகிறது. அதே நேரம் தரத்திலிருந்து இம்மியும் மாறாமல் வெற்றிநடை போட்டுக் கொண்டிருக்கிறது.

'தேசநலன்!' 'தேசநலன்!' 'தேசநலன்!' இதுதான் கல்கியின் அன்றைய, இன்றைய, என்றைக்குமான தாரக மந்திரம்! இந்தத் தாரக மந்திரமும் தரமும் மாறாமல் கல்கியில் இன்னும் என்னவெல்லாம் சேர்க்கலாம்? இப்போதுள்ள கல்கியில் உங்களுக்கு எதெல்லாம் பிடித்திருக்கிறது? எதெல்லாம் தேவையில்லை என நினைக்கிறீர்கள்? கருத்துச் சொல்ல வாருங்கள், வாசகர்களே...

நீங்களும் எங்களுடன் இணைந்து கல்கியை மெருகேற்றலாம். இங்கே கொடுக்கப்பட்டுள்ள கருத்துப் படிவத்தைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். உங்கள் கருத்து மற்றும் ஆலோசனைக்காக ஆவலுடன் காத்திருக்கிறோம். முதலில் வரும் ஐம்பது படிவங்களுக்கு அமரர் கல்கியின் புத்தகங்கள் பரிசாக அளிக்கப்படும்.

கைகோத்து கல்கியை மெருகேற்றுங்கள்;

கை நிறைய பரிசுகளை வெல்லுங்கள்!

அன்புடன்

கல்கி ஆசிரியர் குழு








பெயர்: ..........................................................................................

விலாசம்: ......................................................................................

..........................................................................................

- தாங்கள் எத்தனை வருடங்களாக கல்கி படிக்கிறீர்கள்? ☐
- தங்கள் வயது ☐
- கல்கியில் சமீபகாலமாக ஆக்கபூர்வமான மாற்றங்கள் தெரிகின்றனவா?

  ஆம் ☐ இல்லை ☐
- கல்கியில் இளைஞர்களுக்கும் பக்கங்கள் இருக்கின்றனவா?

  ஆம் ☐ இல்லை ☐
- படிக்கும் வேறு பத்திரிகைகள் ஜூ.வி. ☐ ஆ.வி. ☐

  குங்குமம் ☐ குமுதம் ☐ மற்றவை.......................... (குறிப்பிடவும்)
- +16 இணைப்பில் வரும் செய்திகள் பயனுள்ளவையாக உள்ளனவா?

  ஆம் ☐ இல்லை ☐
- பொதுவாக, கல்கியில் தாங்கள் விரும்பிப் படிக்கும் பகுதிகள்...

1. .................................................... 2. ....................................................

3. .................................................... 4. ....................................................

## கலை

- அடுத்து வெளியிடப்படும் தொடர்கதை கீழ்க்காண்பவற்றுள் யாருடையதாக இருந்தால் நீங்கள் விரும்பிப் படிப்பீர்கள்?

  ☐ அமரர் கல்கி ☐ ராஜேஷ்குமார்

  ☐ சீதா ரவி ☐ வாஸந்தி

  ☐ பாஸ்கர் சக்தி ☐ இயக்குநர் வசந்த்
- தற்போது வெளியாகும் சிறுகதைகளின் எண்ணிக்கை போதுமானதாக உள்ளதா?

  உள்ளது ☐ இல்லை ☐
- அமரர் கல்கியின் படைப்புகளில் தொடர்ந்து எதை வெளியிட்டால் உங்களுக்கு மிகவும் பிடிக்கும்?

  கட்டுரைகள் ☐ சிறுகதைகள் ☐

  தொடர் (சரித்திரம்) ☐ தொடர் (சமூகம்) ☐





- நிமிடக் கதைகள் / ஒரு பக்கக் கதைகள் வேண்டுமா? வேண்டாமா?

  வேண்டும் ☐ வேண்டாம் ☐

- திரைப்பட விமர்சனம் ரசிக்கும்படி உள்ளதா?

  ஆம் ☐ இல்லை ☐

- சினிமா கலைஞர்களின் பேட்டி, கட்டுரைகள் கல்கியில் இடம்பெறுவதை வரவேற்கிறீர்களா?

  ஆம் ☐ இல்லை ☐

- சினிமா விஷயங்கள் சுமார் எத்தனை பக்கங்கள் இடம்பெறலாம் ?

  6 ☐ 8 ☐ 10 ☐ அதற்கும் மேல் ☐

- சின்னத்திரைச் செய்திகள் வேண்டுமா?

  வேண்டும் ☐ வேண்டாம் ☐

- இசை, நாடகம் சார்ந்த செய்திகள் வேண்டுமா?

  வேண்டும் ☐ வேண்டாம் ☐

- பெண்களுக்கான பக்கங்கள் கல்கியில் வேண்டுமா?

  ஆம் ☐ இல்லை ☐

- சித்திரக் கதைகள் வெளியிடுவது ரசிக்கப்படுமா?

  ஆம் ☐ இல்லை ☐

- அரசியல், சினிமா, சமூகம், மருத்துவம், மனிதம் எல்லாம் கலந்த அட்டைப்படக் கட்டுரைகளை தற்போது வெளியிட்டு வருகிறோம். இதே பாணி தொடரலாமா?

  ஆம் ☐ இல்லை ☐

- கட்டுரை இல்லாமல், வெறும் அழகான பெண்கள் முகம் மட்டும் கொண்ட அட்டைப் படங்களை வெளியிடலாமா?

  ஆம் ☐ இல்லை ☐

அரசியல்

- வாரம்தோறும் வெவ்வேறு அரசியல் பிரமுகர்களின் பேட்டிகள் வேண்டுமா?

  ஆம் ☐ இல்லை ☐

- அரசியல் வி.ஐ.பி.களின் இன்னொரு பக்கம்... அதாவது அவர்தம் குடும்பம், தினசரி நடவடிக்கைகள் என்னென்ன, மக்களுக்கு எப்படித் தொண்டாற்றுகிறார்கள்... என்பன போன்ற செய்திகளை வெளியிட்டால் உங்களுக்குப் பிடிக்குமா?

  ஆம் ☐ இல்லை ☐







## ஆரோக்கியம்

- உலக நாடுகளின் மருத்துவ உலகில் நடைபெறும் ஆச்சர்யமான / விநோதமான செய்திகள், நடவடிக்கைகளைக் குறித்த கட்டுரைகள் உங்களால் ரசிக்கப்படுகின்றனவா?

  ஆம் ☐ இல்லை ☐

- குறிப்பிட்ட நோயைப் பற்றி வாரந்தோறும் மருத்துவ நிபுணர்களின் கட்டுரைகள் வேண்டுமா?

  ஆம் ☐ இல்லை ☐

- உங்கள் உடல்நலனைப் பற்றிய சந்தேகங்களுக்கு, டாக்டர்களிடமிருந்து பதில் எதிர்பார்க்கிறீர்களா?

  ஆம் ☐ இல்லை ☐

- வி.ஐ.பி.கள் தங்கள் உடல்நலனை எப்படிப் பாதுகாத்துக் கொள்கிறார்கள் என்பதைக் குறித்த அவர்களுடைய அனுபவங்கள் படிக்க சுவாரஸ்யமாக இருக்குமா?

  ஆம் ☐ இல்லை ☐

- அடுத்த தொடர் கீழ்க்காண்பவற்றில் எதுவாக இருந்தால் உங்களால் பெரிதும் விரும்பப்படும்?

  இருதய மருத்துவம் ☐ வலி நிவாரண மருத்துவம் ☐

  அக்குபஞ்சர் மருத்துவம் ☐ குழந்தை மருத்துவம் ☐

  மற்றவை ........................................................................................ (குறிப்பிடவும்)

## ஆன்மிகம்

- சுஜாதா எழுதும் 'வாரம் ஒரு பாசுரம்' தொடரை விரும்பிப் படிப்பதுண்டா?

  ஆம் ☐ இல்லை ☐

- 'வளம் தரும் கோயில்' தொடர் திருப்தியாகவும் பயனுள்ளதாகவும் இருக்கிறதா?

  ஆம் ☐ இல்லை ☐

- தஞ்சை பரத்வாஜ் எழுதும் ராசிபலன் திருப்தி தருகின்றதா?

  ஆம் ☐ இல்லை ☐

- கோயில் கட்டுரை எப்படி அமைய வேண்டும்?

  பரிகார ஸ்தலங்கள் ☐ சுற்றுலா தொடர்பாக ☐ பிரபலமான கோயில்கள் ☐

## அறிவு

- தன்னம்பிக்கைக் கட்டுரைகள் ?

  வேண்டும் ☐ வேண்டாம் ☐

- வாரம் ஒரு மேற்படிப்பைப் பற்றி எழுதுவது இளைஞர்களுக்கு உபயோகமாக அமையுமா?

  ஆம் ☐ இல்லை ☐

- சுய தொழில் டிப்ஸ் + Success story

  வேண்டும் ☐ வேண்டாம் ☐

- உலக நடப்புச் செய்திகள்?

  வேண்டும் ☐ வேண்டாம் ☐



# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!




## இதழுக்கு இதழ் புதுமை!

மே 2007 முதல்...

# 2 இன் 1 பக்கங்கள்!

அறிவுக்கு ... குட்டீஸ் கோகுலம்

அசத்தலுக்கு... கோகுலம் காமிக்ஸ்

உங்கள் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுங்கள்;
அவர்கள் முகம் மலர்வதைக் காணுங்கள்!

## ஹாலிடே சந்தா சிறப்புச் சலுகை

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
|---|---|---|
| 96/- | ~~192/-~~ 172/- | ~~288/-~~ 250/- |

## இந்தச் சலுகை 30.6.2007 வரையே!

சந்தாத் தொகையை 'Gokulam Tamil' என்ற பெயருக்கு DD அல்லது மணியார்டராக அனுப்புங்கள். காசோலையாக இருந்தால், உள்ளூர்க் காசோலைகள் மட்டுமே ஏற்கப் படும்.

அனுப்ப வேண்டிய முகவரி :
சர்க்குலேஷன் மானேஜர்,
கோகுலம் (தமிழ்), கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை-600 032.



# கருணாநிதி டாக்கீஸ்

திருவாரூர் பாபு

**கா**ர், ஆயிரம்கால் மண்டபத்தைத் தாண்டியது. வெள்ளைக் கோபுரம் பிரம்மாண்டமாகத் தெரிந்தது. ஊரின் நினைவுச் சின்னம். சட்டென மனசுக்குள் பரவசமும் ஏற்பட்டது.

புறாக்கள் கூட்டமாகக் கோபுரத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தன.

பெண்கள் இடுப்பில் குடத்துடன் கோயில் கிணற்றில் தண்ணீர் எடுத்து வருவது தெரிந்தது. கோயில் பிராகாரத்தில் கிரிக்கெட் விளையாண்டது, சோமயாஜுலு படத்தின் ஷூட்டிங் பார்த்தது, பள்ளிக்கூடத்தை 'கட்' அடித்துவிட்டு நண்பர்களுடன் அரட்டை அடித்தது எல்லாம் நினைவுக்கு வந்தன.

ஆடி வந்தால் ஐம்பத்திரண்டு வயது. ஆனாலும் நெஞ்சாங்கூடு பழைய நினைவுகளால் நிரம்பி இருக்கிறது. எதுவும் மறந்த பாடில்லை.

இப்போதுதான் கண்ணீர் மல்க செங்கோட்டை ஃபாஸ்ட் பாஸஞ்சரில் ஏறிய மாதிரி இருக்கிறது. 'ஊருக்குப் போன உடனே முதல்ல ஒரு வாட்ச் வாங்கிக் கையில கட்டுடா'

அப்பா ஐநூறு ரூபாய்ப் பணத்தை பையில் சொருகியது பசுமை நினைவுகள்.

வடம்போக்கித் தெருவுக்குள் காரைச் செலுத்தினேன். உடம்பு முழுவதும் நெகிழ்ச்சி பரவியது.

வீட்டு வாசலில் காரை நிறுத்தியபோது, அம்மாவும் அப்பாவும் வாசலுக்கு வந்தார்கள்.

"**அ**வனுக்குத்தான் ஊர் மறந்து போச்சு. நீயில்ல வருஷத்துக்கு ஒரு தடவ அம்மா, அப்பாவப் பார்க்கணும்னு அவனை அழைச்சுட்டு வரணும்."

கீரை ஆய்ந்துகொண்டே அம்மா, செல்வி வாயைக் கிளறினாள்.

"நான் சொல்றத உங்க பிள்ளை அப்படியே கேக்கறாங்க பாருங்க. எப்ப சொன்னாலும், 'அதான் அப்பா நாலு மாசத்துக்கு ஒருமுறை செக்கப்புக்கு வந்திடறாங்களே. இப்பத்தான் அந்தக் கல்யாணத்துல அம்மாவப் பார்த்தோம்'னு அடக்கிடுவாங்க."

ஜீன்ஸ், டீ ஷர்ட் போட்டிருந்த பேத்திகளை அப்பா உற்றுப் பார்த்தபடி இருந்தார்.



'தகதக'வென அவர்கள் வளர்ந்து நிற்கும் பெருமை ஒருபுறமும், பாந்தமாகத் தாவணி போடாமல் இப்படி பேண்ட் போட்டு அழைத்து வந்திருக்கிறானே என்கிற ஏக்கம் மறுபுறமும் அவர் பார்வையில்.

புறப்படும்போது இரண்டு பெண்களிடமும் போராடி விட்டேன். பெரியவள் அப்பா பிள்ளை. "இந்த விஷயத்தில் மட்டும் என்னைக் கட்டுப்படுத்தாதே டாடி" என்று 'டக்'கெனக் கூறிவிட்டாள். அவள் உடை விஷயத்தில் மட்டும் அப்பா தன்னைக் கட்டுப்படுத்த நினைக்கிறார் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள். ஆனால்,

வேறு ஒரு பெரிய விவரமும் இருக்கிறது. அவனோடு பேசுவதற்கு இன்னும் சந்தர்ப்பம் ஏற்படாத விஷயம். எனக்குத் தெரியாது என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கிற விஷயம். சிவாவோடு புலிவலம் சாலையில் கருணாநிதி டாக்கீஸ் நோக்கி நடந்துகொண்டே நான் பேச வேண்டிய விஷயம்.

"இப்ப ஊருல ஒரே ஒரு தியேட்டர் தான் இருக்கு, சித்தப்பா. செங்கம் தியேட்டைத் தைத்தது.

கருணாநிதி டூரிங் டாக்கீஸில் பழைய படங்கள் மட்டுமே போடுவார்கள். தினசரி இரண்டு காட்சிகள். கதவுகளே இல்லாத தியேட்டர். கோடை காலங்களில் ஏழு மணி வரை வெளிச்சம் இருக்கும். ஏழு மணிக்கு நியூஸ் ரீல் போட்டு, ஏழே காலுக்குப் படம் தொடங்குவார்கள்.

ஐந்தரை மணிக்கு சைக்கிளைத் தள்ளிக்கொண்டு புறப்படுவோம். ஐந்தேமுக்



டர் இருந்த இடத்துல அபார்ட்மெண்ட் கட்டிட்டாங்க. பேபி தியேட்டர் இருந்த இடம் கிரவுண்டா கெடக்கு. கருணாநிதி டாக்கீஸ் இருந்த இடத்துல ரைஸ் மில் வந்திட்டு."

அபிநயா ஊர் நிலவரம் கூறினாள்.

கருணாநிதி டாக்கீஸ் என்றவுடன் உடம்பு சற்றுச் சிலிர்த்தது எனக்கு. இடிக்கப் பட்டு விட்டது என்றதும் 'நச்'சென மனத்

காலுக்கு ரயிலடியைக் கடக்கும்போது பெரும்பாலும் கேட் பூட்டி இருக்கும்.

செங்கோட்டை ஃபாஸ்ட் பாஸஞ்சரும் நாகூர் வண்டியும் போன பிறகு கேட்டைத் திறந்து விடுவார்கள். பத்து நிமிடங்கள் காத்திருக்க வேண்டும். அப்படிக் காத்திருக்கும் நேரத்தில் மெள்ள நடந்து தியேட்டர் போகும் வழியிலும் நிறைய பேசுவோம். ஊர் விஷயங்கள், அரசியல், குடும்ப

நிகழ்ச்சிகள், காதல் விவகாரங்கள்.

அப்படி ஒரு நாள் பேசிக்கொண்டு சென்றபோதுதான் சிவா அருந்ததியைக் காதலிக்கிற விஷயத்தைச் சொன்னான்.

அருந்ததி வேற்று ஜாதி. சிவா வீட்டில் சம்மதிக்க மாட்டார்கள். அதற்காகக் காதலைத் துறக்கவும் சிவா தயாராக இல்லை. எப்படியாவது போராடி அருந்ததியை மணம் முடிக்க வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தான். நான் அந்தப் போராட்டத்தில் அவனுக்கு உதவ வேண்டும் என்று உறுதியாகக் கூறிவிட்டான்.



## புள்ள பொழச்சுக்கும்!

'வியாபாரி' வில்லன் சஞ்ஜித் பரபரவென்று பிஸியாகிவிட்டார். பரட்டை என்கிற அழகு சுந்தரம், பந்துப் பந்து என்று அடுத்தடுத்து படங்கள் கிடைத்திருப்பதில் குஷியாகிவிட்டார். ''எல்லாத்துக்கும் காரணம் ஷக்தி சிதம்பரம் சார்தான். அவர் மட்டும் வியாபாரி படத்துல எனக்கு நல்ல ரோல் தரலேன்னா நான் உங்ககிட்ட இப்படிப் பேசிட்டிருப்பேனா'' என்று யதார்த்தமாகப் பேசுகிறவர், அடுத்து நடிப்பது ஹீரோவாக.

'வில்லனாக நடித்துவிட்டு ஹீரோவாக நடிப்பது உங்கள் இமேஜை பாதிக்காதா?' என்றால்,

''எது நடந்ததோ அது நல்லதாகவே நடந்தது... எது நடக்கிறதோ அது நல்லதாகவே நடக்கிறது... எது நடக்குமோ அதுவும் நல்லதாகவே நடக்கும்'' என்றார் அப்புறம் என்னங்க, புள்ள பொழச்சுக்கும்தானே!

- ப்ரியா

அப்பாவோடு மளிகைக் கடையில் இருந்த சிவா, திருமணம் செய்துகொண்டால் கூட்டுக் குடித்தனத்தில் இருக்க வேண்டும். உடனே அருகில் உள்ள ஏதாவது ஓர் ஊரில் சிவா வேலைக்குப் போக வேண்டிய அவசியத்தை அவனுக்கு வலியுறுத்தினேன். நாகப்பட்டினத்தில் ஒரு சிட்ஃபண்டில் வேலைக்குச் சேர்ந்து, ஒரு வருடம் குடித்தனம் நடத்துவதற்குத் தேவைப்படும் சம்பளம் கிடைக்கும்வரை பொறுமையாக இருந்து...

அருந்ததியுடனான காதலை வீட்டில் சொன்னான். கடும் எதிர்ப்பு - சிவாவின் அண்ணன் வீடு தேடி வந்து என்னைத் திட்டிவிட்டுப் போனார். ஆனால், எதற்கும் மனம் தளராமல் மெள்ள காய் நகர்த்தி அனைவரையும் திருமணத்துக்குச் சம்மதிக்க வைப்பதற்கு கருணாநிதி திரையரங்கில் நாங்கள் பத்துத் திரைப்படங்கள் பார்க்க வேண்டி இருந்தது. அவ்வளவு பேசினோம்.

இருபத்திரண்டு வருடங்கள் வேகமாக ஓடியிருக்கின்றனவே தவிர, நிறைவான வாழ்க்கையா? மனத்துக்குள் கேட்டுக்கொண்டால் பதில் சொல்ல நிறைய யோசிக்க வேண்டியிருக்கும்.

இத்தனை வருடங்கள் கழித்து ஊருக்குப் போகப் போகிறோம் என்றதுமே அம்மா, அப்பாவுக்குப் பிறகு சிவாவைப் பார்க்க வேண்டும், புலிவலம் சாலையில் மெள்ள நடந்துகொண்டே மணிக்கணக்கில் அவனோடு பேச வேண்டும், மனத்தை அரித்துக்கொண்டிருக்கும் மகள் பற்றிய பிரச்னைக்குப் பரிகாரம் கேட்க வேண்டும் என்று மனம் முணுமுணுக்கத் தொடங்கிவிட்டது.

"வா வா... நாளைக்குக் காலைல உன் வீட்டுக்கு வருவோம்னு நெனச்சிக்கிட்டு இருந்தேன்" சிவா பூரிப்பாகச் சொன்னான். நிறைய அடையாளம் தொலைத்திருந்தான். கடைசியாக நான்கு வருடங்களுக்கு முன் சென்னைக்கு ஒருவேளையாக வந்திருந்தவனைப் பார்த்தேன்; அதற்குப் பிறகு இப்போதுதான்!

"அருந்ததி, ராஜு வந்திருக்கான் பாரு."

அருந்ததி வாய் நிறைய "வாங்கண்ணா" என்றாள்.

டி.வி. ஓடிக்கொண்டிருந்தது. விளம்பரத்தில் முன்னணி நடிகை பிரபல துணிக்



**அருந்ததி வேற்று சாதி. சிவா வீட்டில் சம்மதிக்க மாட்டார்கள். அதற்காக காதலைத் துறக்கவும் சிவா தயாராக இல்லை. எப்படியாவது போராடி அருந்ததியை மணம் முடிக்க வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தான்.**

கடையில் புன்னகையுடன் ஜவுளி வாங்கச் சொன்னான்.

சிவா டி.வி.யின் இரைச்சலைக் குறைத்தான்.

"அப்புறம் சொல்லு... எப்ப வந்த? என்ன திடீர்னு... பொண்ணுக்குக் கல்யாணமா?"

"நேத்தி வந்தேன். சும்மாதான்" என்றேன்.

விளம்பரம் முடிந்து, சினிமாவிலிருந்து ஓய்வு பெற்ற அந்த ஹீரோயின் சீரியலுக்காக அழத் தொடங்க.. டி.வி. சத்தத்தைக் கூட்டினான். கவனத்தை அதில் செலுத்தினான்.

அருந்ததியும் அவன் பின்னால் நின்றபடி தொலைக்காட்சியில் கவனமானாள்.

எனக்கு ஒரு மாதிரி அவஸ்தையாக இருந்தது.

"ராஜேஷ் என்ன படிக்கிறான்?" என்றேன்.

என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டு, மீண்டும் டி.வி.யில் கவனமானான். பதில் இல்லை. எனக்குள் ஏதோ ஒன்று மெள்ள உடைந்தது. இப்போது விளம்பர இடைவேளை வர, மீண்டும் சத்தத்தைக் குறைத்தான்.

"என்னமோ கேட்டியே?"

அருந்ததி வேகமாகச் சமையலறை நோக்கிப் போனாள்.

"ராஜேஷ் என்ன படிக்கிறான்னு கேட்டேன்."

"பி.காம். முடிச்சுட்டான். அப்பாகூட ஜுவல்லரியப் பார்த்துக்கிறான்."

அருந்ததி காஃபியோடு வந்தாள். வாங்கி உறிஞ்சினேன்.

சுத்தமாகச் சூடு இல்லை. சர்க்கரைக் கரைசலாக இருந்தது. சர்க்கரை கூடாதென்று சொல்லியிருக்கலாமே? மனம் அதட்டினாலும், அவள் காஃபி போடத்தான் வேகமாகப் போனாள் என்று தெரியாதே! மனம் சமாதானம் கூறியது. டம்ளரைக் கீழே வைத்தேன்.

"அப்புறம் சொல்லு" என்றான் சிவா. கை ரிமோட்டிலும் கண் டி.வி.யிலும் இருந்தன.

"நல்லா போவுதுப்பா இந்த சீரியல்" என்றான்.

"நான் காலையில வரட்டுமா?" என்றேன்.

அவன் முகத்தில் மலர்ச்சி தெரிந்தது; அருந்ததி முகமும் மலர்ந்தது.

"நாளைக்குச் சனிக்கிழமை எப்ப வேணும்னாலும் வா" என்றான்.

மெள்ள எழுந்து கொண்டேன். விளம்பர இடைவேளை முடிந்து போக, சீரியல் வசனத்தின் சத்தம் கூடியது.

ஏதேதோ பேச வேண்டும் என்று நினைத்திருந்தேன். இருபத்திரண்டு வருடங்களை அசைபோட வேண்டும் என்று எண்ணியிருந்தேன். மனசு முழுக்க ஆவலாய் எதிர்பார்த்திருந்த சந்திப்பு ஐந்து நிமிடங்களில் முடிந்து போய்விட்டது.

தெருவில் இறங்கி நடந்தேன். துர்வாசர் சன்னதித் தெரு வெறிச்சோடிக் கிடந்தது. எல்லா வீடுகளிலும் சீரியல் வசனம் கேட்டது. மாலை நேரத்து இருட்டோடு கலந்து ஏதோ வெறுமை தெரிந்தது.

இந்நேரத்துக்கு வாசல் படிகளில் பெண்கள் அமர்ந்திருப்பார்கள். குழந்தைகள் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும். சைகையாலேயே மதிய சமையல் கேட்பார்கள். வீட்டுப் பிரச்னைகளை விவாதிப்பார்கள். இதெல்லாம் அந்தக் காலம். விஞ்ஞான வளர்ச்சியில் உலகம் சுருங்கிவிட்டது. உறவும் நட்பும் விலகிப் போகின்றனவோ என்று தோன்றியது எனக்கு. ●




''சமையல் கலை புக்ஸ் நாலஞ்சு கொடுப்பா...!''

''கங்க்ராஜுலேஷன்ஸ், சார்...! விஷ் யூ எ ஹேப்பி மேரிட் லைஃப்...''

– ஆர்.பிரசன்னா

# நாயைத் துரத்தும் பூனை!



''எங்க ஓட்டல்ல உங்களுக்குப் பிடிச்ச அயிட்டங்கள் ஏதேனும் ரெண்டைச் சொன்னீங்கன்னா பேப்பர்ல விளம்பரம் போட வசதியா இருக்கும்.''

''நாற்காலியும் மேஜையும்!''

– பெ.கலாசாமி



'' என்னது! உங்க வீட்டில் பூனை நாயைத் துரத்துது.''

''வேறொண்ணுமில்லே, பூனையை என் பொண்டாட்டி வளர்க்கறா. நாயை நான் வளர்க்கறேன்.''

– ஆர்.தங்கராஜ்

‘‘டாக்டர், கொஞ்ச நாளா என் கணவருக்குத் தூக்கத்துல பேசற வியாதி இருக்கு...’’

‘‘பகல்ல பேசறதுக்குக் கொஞ்சம் பர்மிஷன் கொடுத்தா எல்லாம் சரியாப் போயிடும்.’’

-ஆர்.ஆர்.பூபதி





‘‘உனக்காக என்ன வேணுமானாலும் செய்வேன்னு உன் காதலிகிட்ட சொன்னியே என்ன ஆச்சு...?’’

‘‘எனக்கு ஒரு நல்ல மாப்பிள்ளையா பாருங்கன்னுட்டா!’’

– தஞ்சை அனார்கலி

‘‘டூத்பேஸ்ட் விளம்பரத்துல அந்த கிரிக்கெட் வீரர் நடிச்சிருக்காரு போல...’’

‘‘ஆமா, அந்த பேஸ்ட் வாங்கிப் பல் விளக்கினா, அந்த கிரிக்கெட் வீரர் மாதிரியே ‘ஆடாம’ பல்லும் ஸ்ட்ராங்கா இருக்குமாம்!’’

– குருவை ஆர்.தேவிகா



# மதுரை வீரன்



இன்னொரு காதல் கதை. அந்தஸ்து குறுக்கே வர்றதால பிரிக்கப்படற ஜோடி, எப்படி ஒண்ணு சேர்றாங்கங்கறது நீட்டி முழக்கிச் சொல்லப்பட்டிருக்கு. கதாநாயகனா ஜித்தன் ரமேஷ். அப்பாவியா முகத்தை வெச்சுக்கிட்டு காதலிகிட்ட வழியும்போது, அப்பாகிட்ட அடங்கிப் போகும்போது, தங்கக் கூண்டுல சிறை வைக்கப்படும்போது, கடைசியில அரிவாளைத் தூக்கிட்டு சீறும்போதும்னு போதுமான அளவுக்கு வெளுத்து வாங்கறார். புதுமுக நாயகி சலோனி அழகான ஆப்பிள். நடிக்கவும் தெரிஞ்சுருக்கறது கூடுதல் பலம்.

லாலோட கெட்டப் புதுமையானது. வில்லனாவே பார்த்துப் பழக்கப்பட்ட நமக்கு, அவர் மகள் மேல பாசத்தைப் பொழியும்போது மாறுதலா இருக்கு. ரமேஷோட அப்பாவா வர்றவர், வளர்ந்த பையனை கொடூரமா நடத்தறது கொடுமை. 'தூள்' சொர்ணக்காவைப் பார்த்தாலே எரிச்சல்தான் வருது. பார்ட்டி செம டார்ச்சர்.

ஸ்ரீகாந்த் தேவா இசையில யாதவா, கொக்கா மக்கான்னு குத்துப் பாட்டுங்களுக்குத் தியேட்டர்ல ஒரே கும்மாளம். 'காலையும் நீயே' மெலடி பிரியர்களுக்குச் சரியான தீனி.

திரைக்கதை செம டல். காதலிக்கிற பையனை அப்பா கூட்டிட்டுப் போய் அடைச்சு வச்சு இம்சை தர்றதெல்லாம் அலிபாபா காலத்து டெக்னிக். பாதிப் படம் முடியும்போது ஒரு க்ளைமாக்ஸ் வருது... முடிஞ்சுதா படம்னு எழுந்திருக்கும்போதே அடுத்து அரைமணி நேரம் தாண்டித்தான் நிஜ க்ளைமேக்ஸ்னு மண்டைல தட்றாங்க. சிறப்பா வந்திருக்க வேண்டிய படம்...ம்... எங்கயோ மிஸ்ஸாயிருச்சு!




உலகக் கோப்பை கிரிக்கெட்ல ஊத்திக்கிட்ட இந்தியாவால நம்மாளுங்க மனசொடிஞ்சுப் போயிருக்க, அவங்கள ஆறுதல்படுத்தற மாதிரி வந்திருக்கற படம். அதுக்காக லகான் மாதிரியெல்லாம் கற்பனை செய்ய வேண்டாம். லோக்கல் டீம்... அதாங்க... நம்ம ஏரியா பசங்க ஆடுற கிரிக்கெட்டைப் பத்தின கதை. சராசரி இந்தியனோட வாழ்க்கைல கிரிக்கெட் எந்த அளவு ஊடுருவியிருக்கு, அதனால வரும் அடிதடி, நட்பு, 'கலாய்ப்பு'ன்னு பலதையும் தொட்டு தான் பண்ணியிருக்காங்க. யாரும் நடிக்கிற மாதிரியே தெரியல... அப்படியே வாழ்ந்திருக்காங்க.

எல்லாரும் புதுமுகங்கள் அல்லது இதுக்கு முன்னாடி சினிமாக்கள்ல அங்கே இங்கேன்னு தலைகாட்டினவங்க. காட்சிகள் விறுவிறுப்பா நகருது. ஆர்ட் ஃபிலிம் மாதிரி தெரிஞ்சிடக்கூடாதுன்னு அப்பப்போ பாட்டு, சண்டை, ஆட்டம்னு தாளி விட்டிருக்காங்க. யுவனோட மியூசிக் பவர்ஃபுல்லா இருக்கு. கொஞ்சமும் சோடை போகாம பின்னணி. வர்ணனையாளரா வர்ற கோபிக்கு ஸ்பெஷல் பாராட்டு. அவரோட சடார் சடார் கமெண்ட்டுங்க கைதட்டி ரசிக்க வைக்குது. படம் நெடுக நகைச்சுவை அருவியா கொட்டுது. இப்படியொரு ஜாலியான டைரக்ஷன் உத்தியை வெங்கட் பிரபு இவ்ளோ நாளா எங்க ஒளிச்சு வச்சிருந்தார்? சக்தி சரவணனோட ஒளிப்பதிவு ரத்தமும் சதையுமா மனிதர்களை நம் கண் முன்னாடி பதிவு செஞ்சிருக்கு.

சென்னை - 28... பூத்துக்கு ஏற்ற ஜாலி ட்ரீட்மெண்ட்.

- லஜ்ஜாவதி



# பரபரப்பால்

பரபரப்பின்போது சிலருக்கு அதிக வியர்வை நடுக்கம், இருதய படபடப்பு போன்றவை ஏற்படும். தைராய்டு சுரப்பி அதிகமாக சுரந்தாலும் இவ்வாறு பரபரப்பு ஏற்படும். காபி, டீ போன்ற பானங்களை அளவுக்கதிமாகச் சாப்பிட்டு வாதபித்தங்கள் அதிகரித்தும் இப்படி ஏற்படலாம்.

சில மணி நேரங்களிலிருந்து, சில வருடங்கள்வரை கூட இப்பிரச்னை நீடிக்கலாம்.

சிலருக்குக் காலை முதல் இரவு வரை வருடக் கணக்காக பரபரப்பு, கவலை இருக்கும். இதற்கு Generalized anxiety disorder என்று பெயர். ஆண்களைவிட பெண்களுக்கே இது அதிகமாகக் காணப்படுகிறது. இவர்கள் எப்போதும் கவலையுடன் இருப்பார்கள். சின்ன விஷயங்களுக்குக்கூட கவலைப்படுவார்கள். வேலை, ஆரோக்கியம், பாதுகாப்பு வாகனங்கள், வீட்டில் உள்ளோரின் நிலை என்று எதையாவது நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டே இருப்பார்கள். இந்தப் பரபரப்பு புறக் காரணங்களாலும் ஏற்படலாம் - தலையில் அடிபடுவது, நுண்கிருமிகளின் தாக்குதல் இருதய நோய், தைராய்டு சுரப்பி பிரச்னை, காது நோய், சில மருந்து மாத்திரைகள் போன்றவை இதற்குக் காரணமாகலாம்.

பரபரப்பால் என்ன விளைவு அல்லது பாதிப்பு என்ற கேள்வி எழும். திடீரென்று நெஞ்சுவலி, தலைச்சுற்று, மயக்க உணர்வு, அல்லது தள்ளாடும், நிலைமை உண்டாகும். மேலும் மரணபயம் சுய நினைவை இழக்கின்ற உணர்வு, வாந்தி வருவது போன்ற உணர்வு, எந்த விஷயங்களிலும் பற்று இல்லாதது, போன்றவை அச்சுறுத்த வாய்ப்பு உண்டு. உடல் நிலையைப் பொறுத்தவரை குளிர், வயிற்று வலி கை கால் மரத்துப் போதல், மனம் இளகி அழுவது, மூச்சுத் தடை, கை கால் நடுக்கம் உண்டாகும். இம் மாதிரியான அறிகுறிகள் பத்து நிமிடங்களுக்கு ஏற்பட்டு பின்பு தணிந்து விடும். 'ஏதேனும் பிரச்னைகள் வருமோ?' என்கிற பயம் இருந்து கொண்டே இருக்கும். உடல்ரீதியான பரிசோதனைகள் செய்து பார்த்தால் முடிவுகள் நார்மலாக இருக்கும்.

வாதம் மேலோங்குவதால் இம் மனநோய் வருவதாக ஆயுர்வேதம் கூறுகிறது.



## ஆண்களைவிட பெண்களுக்கே இது அதிகமாகக் காணப்படுகிறது!

டாக்டர் எல்.மஹாதேவன்

**மனச் சோர்வு**

மனத்துக்குள் ஏற்படும் அதீதமான மகிழ்ச்சியை mania என்றும், மனச் சோர்வை depression என்றும் கூறுகிறோம்.

வாழ்க்கையில் எதையாவது இழந் தாலோ, தோல்வி அடைந்தாலோ, அதிர்ச்சி அடைந்தாலோ ஏதேனும் பெரும் விபத்துக்களாலோ சோகம் ஏற்படலாம். இச் சோகம் வாதக் கபத் தன்மை உடையது. ஏதேனும் சோகம் ஏற்பட்டு அச்சோகம் நாள் கணக்கில் ஏன் வருடக்கணக்கில் இருந்தால் அது மருத்துவ ரீதியாக கவனிக்கப்பட வேண் டியதாகும். இதைக் கப உன்மாதம் என்கிறோம்.

உலகில் நிறையப் பேர் இம்மாதிரி யான மன நோயினால் பாதிக்கப்பட் டுள்ளனர். மனச்சோகம் depression இருப் பவர்களுக்கு தாம்பத்ய வாழ்க்கையில் சோர்வு இருக்கும். ஆர்வம் குறையும். மேலும் மந்தத்தன்மை, எரிச்சல் மற்றும் பரபரப்பு காணப்படும். தனிமையில் இருப்பார்கள், பேச்சுக் குறையும், சாப் பாட்டில் ஆர்வம் குறையும்; உறக்க நிலை மாறுபடும். சந்தோஷம், சோகம் போன்ற உணர்வுகளை வெளிப்படுத்த முடியாது. கவனம் குறையும்; தாழ்வு மனப் பான்மை ஏற்படும்; உடல் எடை குறையும்.

சிலர் பிறவி இயல்பாகவே சோக நிலையில் தத்தளிப்பார்கள்.

இவர்கள் தற்கொலைக்குக் கூட முயற்சி செய்வார்கள். இவர்களை மருத் துவமனையில் அனுமதித்து சிகிச்சை அளிப்பது அவசியம்.

இவர்களுள் சிலர் 'உடல் அங்கங்கு வலிக்கிறது' என்பார்கள். 'இந்த நோய் வந்துவிட்டது,' 'அந்த நோய் வந்துவிட்டது' என்று பயப்படுவார்கள். இவ்வாறு மனத்தில் வருகின்ற நோய்கள் எல்லாம் உன்மன நோய்கள் என்கிறது ஆயுர் வேதம்.

**ம**ன பரபரப்பு உள்ளவர்களிடம் மருத்துவர் அதிக நேரம் பேசி, 'ஸத்வா வஜயம்' என்கிற துன்பத்தை நீக்கி, மனத்துக்கு நம்பிக்கை ஊட்டுகின்ற நல்வார்த்தைகளைக் கூற வேண்டும். தூக்கம் வருகிறதோ, இல்லையோ இர வில் தூங்க வேண்டும். இரவுச் சாப் பாட்டுக்கும் தூக்கத்துக்கும் இடையே இரண்டு மணி நேரம் இடைவெளி

# நிகழும் பாதிப்பு!


சிலர் பிறவி இயல்பாகவே சோக நிலையில் தத்தளிப்பார்கள். இவர்கள் தற்கொலைக்குக் கூட முயற்சி செய்வார்கள்!

வேண்டும். இரவில் தூக்கம் வராத நிலையில் தலையில் க்ஷீரபாலா தைலத்தையோ மதுயஷ்டியாதி தைலத்தையோ தேய்த்துக் குளிக்கலாம். இதே தைலத்தை பாதத்தில் தேய்த்தால் தூக்கம் நன்கு வரும். தூக்கம் வருவதற்கு முன்பு அஸ்வகந்தா, ஜடாமாம்சி, வெண்சந்தனம், தாமரை சங்க புஷ்பி, இவற்றைப் பொடித்து இரவு சாப்பிடுவது நல்ல பலனை அளிக்கும். தூங்குவதற்கு முன்பு இரண்டு துளி க்ஷீரபலா தைலத்தையோ கல்யாணக கிருதத்தையோ நஸ்யம் செய்வதும் நல்ல பலன் கொடுக்கும்.

**ம**ன பரபரப்பு உள்ளவர்களுக்கு மஹா கல்யாணக் கிருதத்தை இரண்டு நேரங்கள் கொடுக்கலாம். வாதம் அதி கரிப்பதால் விளையும் பயம் போன்ற வற்றுக்கு தகரம், வெண்தாமரை, தண்ணீர் விட்டான் கிழங்கு, வல்லாரை, நீர் பிரம்பி, வாலுலுவை அமுக்குரம், பவள பஸ்பம் போன்றவையும் நல்ல பலனைத் தரும். வசம்பு, திப்பிலி, காகணவேர் வாயுவிடங் கம் போன்றவை சோகத்தைப் போக்க வல்லவை. கரிகாலைச் சாறு, வல்லாரைச் சாறு குப்பைமேனி, மாதுளஞ்சாறு இவற்றோடு காகண வேரைச் சேர்த்து நெய் காய்ச்சிக் கொடுப்பதும் உண்டு. இவை பலனளிக்காமல் போனால் மஹா பைசாசக் கிருதம், பூதராவக் கிருதம் போன்றவற்றைக் கொடுக்கலாம் இம் மாதிரி நோயாளிக்குத் தலைப் பொதிச்சல் என்கிற சிகிச்சை உண்டு.

நெல்லிக்காய் கோரைக் கிழங்கு, நன்னாரி வெட்டிவேர், தாமரை-இவற்றை யெல்லாம் நன்றாக அரைத்து, பசை போலத் தலையைச் சுற்றி பூச வேண்டும். பின்பு தாமரை இலையைக் கொண்டு தாரை (எண்ணெய் பொழியும் சிகிச்சை) செய்ய, sympathetic activity adrenal secretion மிகவும் குறையும். மனத்துக்கு அமைதி கிடைக்கும். சிரோ வஸ்தி (தலையில் எண்ணெயை சிறிது நேரம் தேக்கி வைத்துக் கொள்ளும் சிகிச்சை) என்கின்ற சிகிச்சையையும் செய்வார்கள்.

இது அல்லாமல் மனச்சோகங்களில், தீக்ஷ்ணமான நஸ்யங்கள் மிக்க பலனளிக் கின்றன. கடுகு எண்ணெய்களைக் கொண்டு நஸ்யம் செய்வது தூம வர்த்திகளைப் பயன்படுத்துவதால் பலன் அதிகம். ஸாரஸ்வதாரிஷ்டமும் நல்ல பலன் அளிக்கின்றது. மானஸமித்ரம், ஸம்ருதி ஸாகர ரஸம் போன்றவை எல்லாமும் பலன் அளிக்கின்றன.

இவற்றை எல்லாம்விட முக்கியமாக உறவுகள் மேம்பட வேண்டும். வீட்டு நிலைமைகளும் மனித உறவுகளும் சரியாக அமைய வேண்டும். மருந்தோடு சுற்றுப் புறமும் இனிமையாக அமைந்தால்தான் இந்நோய் சரியாகும். வெளியூர் பயணங் கள் சுற்றுலாக்கள் மனத்துக்கு மாற்றாக அமையும். மனநோய் குணமடைய ஆதித்ய ஹ்ருதயம், மிருத்யுஞ்சய மந்திரம், விஷ்ணு ஸஹஸ்ரநாமம் போன்றவற்றைப் களை பாராயணம் செய்வதும் சிறந்த மருத்துவமாகும்.

**(தொடரும்)**

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண் 24

**கோ**பத்தைக் கட்டுப்படுத்த நீங்கள் கையாளும் சிறந்த வழி முறை ஒன்றை எழுதி அனுப்புங் கள். சிறந்தவை தேர்ந்தெடுக்கப் பட்டு முதல் பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகமும் பரிசாக வழங்கப்படும். ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

கடைசி நாள் 14.5.2007.

# வலி!

பாவண்ணன்

சங்கிலிக்குள் கட்டுண்ட
மதமேறிய யானையென
பிளிறிக் கொண்டிருக்கிறது ஆபத்து

ஒவ்வொரு நொடியும்
அதன் ஓசை காதைக் கிழிக்கிறது
எல்லாப் பக்கங்களிலிருந்தும்
பிளிறல்களின் சிறகுகள் கேட்பதால்
எந்தத் திசைவழியாக
கிழித்துக்கொண்டு வெளிப்படுமோ புரியவில்லை
காலை புலரும்போது பீதியும் படர்கிறது
இரவு கவியும்போது தவிப்பும் படர்கிறது
ஆபத்து பரவும் நேரம்
பகலா நள்ளிரவா தெரியவில்லை
நடுக்கத்தில் உடல் உறைகிறது
அழுகை புலப்படாதபடி உதடுகடித்து
வீட்டுக்குள் நடமாடுகிறார்கள் பெண்கள்
மௌனம் உறைந்த விழிகளுடன்
அமைதிப்படுத்துகிறார்கள் ஆண்கள்

காவலர்கள் வாகனங்களில் அலைந்தலைந்து
பாதுகாப்பைப் பார்வையிடுகிறார்கள்
சந்தேகப்படும்படியான தெருவில்
ஒன்றுக்கு இருமுறையாகச் சோதனையிடுகிறார்கள்
புதிய முகங்களை நிறுத்தி விசாரிக்கிறார்கள்
தெளிவான உத்தரவுகளோடு
முக்கியமான சதுக்கங்களிலும் தெருமுனைகளிலும்
விசேஷப் படைகளை நிறுத்துகிறார்கள்
பிளிறலோசை அவர்களுக்கும் கேட்கிறது
இடம்குறித்த விவரம்தான்
துல்லியமாகத் தெரியவில்லை
அதுதான் பிரச்சனை
குழப்பமான உணர்ச்சிகளோடு
விரல்நகங்களைக் கடித்தபடி நகர்கிறார்கள்

அடையாளம் காண இயலாத
அதன் பிளிறலில் பூமியே நடுங்குகிறது
அந்த முழக்கம் நெஞ்சைப் பிசைகிறது
அந்த ஆவேசமும் வெறியும் நடுங்க வைக்கின்றன
எல்லாருடைய விழிகளிலும் தளும்புகின்றன
இயலாமையும் வலியும்.





“அந்தப்
படத்துல
நடிக்கறதுக்கு
முன்னாடி
பெரியாரைப்
பத்தி அவ்ளோ
ஒண்ணும்
தெரியாது.”

# “நான் அவள் இல்லை!”

- ஜோதிர்மயி

**ஜோ**திர்மயி... அறிமுகமான முதல் படத்திலேயே தமிழ் ரசிகர்களின் நெஞ்சுக்குள் குடியேறிவிட்ட மலையாள மங்கை. தாய் நகரமான கேரளத்தைப் பற்றி மூச்சு விடாமல் பேசுகிறார்.

''அங்க பிறந்ததை நான் பெருமையா நினைக்கறேன். ஆரம்பத்துல மலையாளப் படங்கள்தான் என் பேர் சொன்னவை. 'தலைநகரம்' மூலமாத்தான் தமிழ்ல எண்ட்ரி. கேரளாவுல கிடைச்ச அங்கீகாரம் இங்கயும் கிடைக்க நான் ரொம்பக் கொடுத்து வச்சிருக்கணும்'' என்கிறவர், தமிழ் ரசிகர்கள் தலையில் பெரிய ஐஸ் பாரையே வைக்கிறார்.

''அவங்க சாதாரணமா ஒரு நடிகையை ஒப்புக்க மாட்டாங்க. ஏத்துக்கிட்டாங்கன்னா கோயில் கட்டாம விடமாட்டாங்க. அவங்க மனசுல என்னைக்கும் நான் இருக்கணும். அதுதான் என்னோட ஆசை.''

'சரி, எப்படி கேரள நடிகைங்க மட்டும் தமிழ்நாட்ல பலமா ஆட்சி செய்றாங்க?' என்றால், விழுந்து விழுந்து சிரிக்கிறார்.

''முதல் விஷயம் அழகு. ரெண்டாவது நடிப்பு. இது ரெண்டுமே கேரள நடிகைகளுக்கு இயல்பா அமைஞ்சுடுது. இதைத்தான் காரணமா நான் நினைக்கிறேன்'' என்றவரைக் கடுப்பேற்ற,

'சபரி படம் சரியாப் போகலையே...' என்றோம்.

''அதனாலென்ன... நான் அவன் இல்லை நல்லாப் போகுதே. ஒண்ணு புரிஞ்சுக்கங்க. லைஃப்ல ஏற்ற இறக்கம் சகஜம்.''

அட! என்ன பேச்சு பேசுகிறார் ஜோதிர்மயி. இதோ... இப்போது மாட்டப் போகிறார் பாருங்கள்...

'ஆமா, உங்களுக்குக் கல்யாணமாயிடுச்சாமே?'

''அது...அது..வந்து...வந்து.... இப்படியெல்லாம் நான் திக்கித் திணறுவேன்னு தானே எதிர்பார்த்தீங்க... அதுதான் கிடையாது. ஆமா, எனக்கு மேரேஜ் ஆயிருச்சிதான். இதுல மறைக்க என்ன இருக்கு? அது என் சொந்த விஷயம். என் ப்ரொஃபஷனைத்தான் பார்க்கணும். அதுல ஒழுங்கா நடிக்கிறேனா, இல்லையான்னு பாருங்க, கேள்வி கேளுங்க... கல்யாணம், குடும்பம் பத்தியெல்லாம் ஏன்? எதுக்கு? இன்னொரு விஷயம் தெரியுமா? முன்ன மாதிரி இல்ல... சினிமா ரசிகர்கள் இப்ப ரொம்ப மாறிட்டு வராங்க. நடிகைக்கு நடிப்பு வருதான்னுதான் பார்க்கறாங்க... கல்யாணமாயாச்சான்னு நோக்கல... அதுக்கு நானே உதாரணம்!''

'ஓகே ஓகே கூல் டவுன் ஜோதி.... 'பெரியார்' படம் பண்றீங்க... பெரியாரைப் பத்தி ஏதாச்சும் தெரியுமா?

''அந்தப் படத்துல நடிக்கறதுக்கு முன்னாடி பெரியாரைப் பத்தி அவ்ளோ ஒண்ணும் தெரியாது. பெரியார் மனைவி நாகம்மை கதாபாத்திரத்துல டைரக்டர் ஞானராஜசேகரன் சார் என்னை ஒப்பந்தம் பண்ணினதும் இன்டர்நெட், லைப்ரரின்னு நுழைஞ்சு, பெரியார் பத்தி எல்லாம் தெரிஞ்சுக்கிட்டேன். ப்பா.... அவர் எவ்ளோ பெரிய ஆளு! இந்தப் படத்துல நடிக்க நான் கொடுத்து வச்சிருக்கணும்'' என்று ஆச்சர்யப்பட்டவர்,

''காதல், அதிரடிப் படங்கள் ரொம்ப நாளுக்கு மக்கள் மனசுல நிக்காது. ஆனா சரித்திரப் படங்கள் அப்படி இல்ல. இன்னைக்கும் வீரபாண்டிய கட்டபொம்மனைப் பத்தி பேசிட்டிருக்கோம்; இனியும் பேசுவோம். 'பெரியார்' படமும் இப்படித்தான்! பெரியாரா சத்யராஜ் சாரும், மணியம்மையா குஷ்பு மேடமும், நாகம்மையா நானும் வாழ்ந்துருக்கோம்.. சாதித்து வாழ்ந்த அவங்களுக்கு நிழலாக நடிச்சதே பெரிய பாக்கியம் இல்லையா...!''

'அடுத்து இந்திக்குப் போறீங்களாமே...'

''ஆமாம். 'அனுபவ்'னு ஒரு படம் பண்றேன். தொடர்ந்து மலையாளம், தமிழ்லயும் பின்றேன்'' என்றவரிடம், 'உங்களைப் பத்தி ஒரு கான்ட்ரவர்ஸி சொல்லுங்களேன்' என்றோம்... தெளிவாக வருகிறது பதில்- ஜோதிர்மயியிடமிருந்து...

''நான் அவன் இல்லை!''

- நிரஞ்சனா



# இணைந்தே இருக்கட்டும்!

**அமைச்சர் ஆற்காடு வீராசாமி கொஞ்ச நாட்களுக்கு முன்பு நீதிமன்றத்தை விமர்சித்துப் பேசியிருந்தார். இது குறித்து வாசகர்களின் கருத்துகளைக் கேட்டிருந்தோம். சிறந்த கருத்தெழுதி தலா ரூ.250 பரிசு பெறும் எட்டு வாசகர்கள்...**

நீதிமன்றங்களும், ஆட்சியாளர்களும் இணைகோடுகளாக, இரு தண்டவாளங்கள் போல் அமைந்திருக்க வேண்டும். நீதிமன்றங்களை ஆட்சியாளர்கள் மதித்து நடந்தால்தான், நீதிமன்றங்கள் தரும் தீர்ப்பை, மக்கள் மதித்து நடப்பார்கள்.

**- சோம.தேவராசன், நாச்சியார்கோவில்**

மக்கள் தங்கள் தரப்பு நியாயத்துக்காக மலைபோல நம்பி இருப்பது நீதிமன்றங்களைத்தான். இந்நிலையில் மக்களின் நம்பிக்கையை ஆட்டம் காண வைக்கும் அமைச்சரின் இம்முயற்சி தேவைதானா!

**- கே.ஜி.எஃப்.சி.பழனிசாமி, சென்னை**

அரசின் ஊதியமே நீதிபதிகள் பெற்றாலும் நியாயம் நியாயம்தான் என்றுதான் 99 வார்டுகளில் மறு தேர்தல் நடத்த உத்தரவு இட்டுள்ளார் நீதிபதி. அதன் பிறகு அமைச்சரோ, கட்சிக்காரர்களோ நீதிபதிகளை ஒட்டுமொத்தமாக விமர்சித்தது தேவையற்றது!

**- ஆர்.ஆர்.பூபதி, திண்டுக்கல்**

நீதிமன்றம் என்பது விருப்பு வெறுப்பு இன்றித் தீர்ப்பளிக்கும் நீதி தேவதையின் இருப்பிடம். தமக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்தால் போற்றிப் புகழ்வதும் பாதகமாகத் தீர்ப்பு வந்தால் தூற்றி இகழ்வதும் அரசியல்வாதிகளான ஆட்சியாளர்களுக்கு அழகல்ல!

**- புல்வை இரா.செல்லம், தூத்துக்குடி**

மாண்புமிகுக்களின் சிறல் கோர்ட்டாரின் 'கன'த்தைக் குறைக்க எடுத்த முயற்சி. ஆனால், பூனைக்கு மணி கட்டியதன் விளைவு எலிகளைப் பெருச்சாளிகளாகக் கொழுக்க வைத்து விடாதா? நிர்வாகமும் நீதித்துறையும் எலியும் பூனையுமாக இருப்பது ஜனநாயகத்துக்கு இழுக்கில்லையா?

**- சுமித்ரா கல்யாணராமன், சென்னை**

நீதித்துறை என்பது அரசின் ஓர் அங்கமே. மறைவாக, சூசகமாக தன் கருத்தைச் சொல்வதை விடுத்து இப்படிப் பேசியிருப்பது தம் ஆட்சியின்மீதே குறை சொல்லிக் கொள்வதற்கு ஒப்பாகும்.

**- கிரிஜா மணாளன், திருச்சி**

உள்ளாட்சித் தேர்தலை நேர்மையாக நடத்த வேண்டிய பொறுப்பு மாநில அரசுக்கு உள்ளது. அப்படி நடக்காதபோது அதைக் கண்டிக்கும் அதிகாரம் நீதிபதிகளுக்கு உண்டு.

**- வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி**

நீதித் துறையும், அரசியலும் நாட்டின் கண்கள். இரண்டில் எந்த ஒன்றும், தன் அதிகாரத்தை நிலை நாட்டும் பொருட்டு மோதல் போக்கில் இறங்குவது நாட்டுக்கு நல்லதல்ல!

**- திருமயம் பெ.பாண்டியன், காரைக்குடி**

உலகக் கோப்பை ஸ்லோகன் எழுதச் சொன்னாலும் சொன்னோம். வாசகர்கள் இந்தியா ஜெயிக்கும்னு ரொம்பக் கனவு கண்டு உருகித் தள்ளிட்டாங்க. ஆனா பாவம், இவங்க எல்லார் ஆசையையும் தவிடு பொடியாக்கிட்டு இந்தியா ரொம்பச் சீக்கிரமா வெளியேறிடுச்சி. இருந்தாலும் நாம கௌரவிக்காம இருக்கக் கூடாதில்ல. த்தோ... பெஸ்ட் ஸ்லோகன் எழுதி தலா ரூ.250 பரிசு பெறும் எட்டுப் பேர்.

நின்று விட்டோம் ஒன்றாய்
வென்று வருவோம் நன்றாய்

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

செல்ஃபோன் அடிச்சா ரிங்கு!
ஷேவாக் அடிச்சா எதிரணிக்குச் சங்கு!

**- டி.ஜெய்சிங், கோவை**

நாங்க ஒரு தடவை ஜெயிச்சாலும்
வேர்ல்டு கப்பைத்தான் ஜெயிப்போம்!

**- ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்**

கட்டுக்கோப்பைக் கையாள்வோம்!
வெற்றிக் கோப்பையைக் கைகொள்வோம்!

**- எஸ்.சேதுராமன், கமுதி**

எதிர்த்து நின்றால் எமனடா...
வெல்லும் அணிதான் எமதடா..!

**- ஆர்.நெடுஞ்செழியன், சென்னை-4**

இந்திய அணியா கொக்கா?
இனியாவது புரிஞ்சுக்குங்க மக்கா!

**- ஆ.விஜயலக்ஷ்மி, திருச்சி**

நடக்கக் கூடாது தப்பு!
நமக்குத்தான் கப்பு!

**- பா.பனிமலர், திருப்பாலை**

உலகக் கோப்பையிலே நம் குடியிருப்பு!

**- கே.பொன்னுசாமி, சென்னை**

# கொக்கா? மக்கா!





**சோ**தனைகளோ, துன்பங்களோ, பிரச்னைகளோ எதிர்கொள்ளும்போது, நம்மில் பலர் போராட்ட குணமோ, தைரியமோ இல்லாமல் 'நடப்பது நடக்கட்டும் என்று ஒதுங்கிக்கொள்வது உண்டு. இன்னும் சிலர் இறுதிவரை போராடுவார்கள். ஆனால், அரிதாகச் சிலர் இருக்கிறார்கள். பிரச்னைகளை எதிர்த்துப் போராடும்போது, அதில் கிடைக்கும் படிப்பினைகளைப் பொதுமக்கள் விழிப்புணர்வு அடைவதற்குப் பயன்படுத்துவார்கள். அப்படிப்பட்டவர்தான் டி.எஸ்.பழனிவேலு. சென்னையில் ரியல் எஸ்டேட் தொழிலில் இருக்கும் பழனிவேலு, கிட்டத்தட்ட பத்து வருடங்களாக நீதிமன்றத்தின் நீண்ட படிக்கட்டுகளில் ஏறி வருகிறார்.

''எனக்கு மூன்று பெண்கள். மூத்த பெண் சண்முகப்ரியாவை மடிப்பாக்கத்தைச் சேர்ந்த முருகன் என்பவருக்குத் திருமணம் செய்து வைத்தோம்.. மாப்பிள்ளை கேட்டதையெல்லாம் செய்தேன். ஆனால், அவரது ஆசைக்கு அளவேயில்லாமல் போயிருச்சு. அதனால் என் மகளுக்குக் கொடுமைகள் துவங்கிடுச்சு. இந்த நிலையில் என் மகளுக்கு ஒரு குழந்தையும் பிறந்தது. 1997-ல் ஒரு நாள் திடீரென்று மாப்பிள்ளை வீட்டிலிருந்து ஃபோன் வந்தது. மடிப்பாக்கத்துக்கு ஓடினோம். அங்கே என் மகளும், குழந்தை அபிராமியும் கருகிய நிலையில் பிணமாகக் கிடந்தார்கள்...'' கண்களில் நீர் கோத்துக் கொள்ள குரல் தழுதழுத்துத் தடுமாறுகிறது. சில நிமிட இடைவெளிக்குப் பின் தொடர்கிறார்...





# குறட்டை விடும் காவல்துறை... விடுதலையாகும் குற்றவாளிகள்!

''மாப்பிள்ளை முருகன் மற்றும் அவர் அம்மா, அப்பா, தம்பி ஆகியோர் மீது போலீஸ் கொலை வழக்கு பதிவு செய்து கைது செய்தது. செஷன்ஸ் நீதிமன்றத்தில் முருகனுக்கு ஆயுள்தண்டனை வழங்கப் பட்டது. மற்ற மூன்று பேர் விடுதலை செய் யப்பட்டார்கள். அந்த விடுதலையை எதிர்த்து உயர்நீதி மன்றத்தில் மேல் முறையிடு செய்தேன். முருகன், தமக்கு அளிக்கப்பட்ட தண்டனையை எதிர்த்து மேல் முறையிடு செய்தார். என்னுடைய மேல் முறையீட்டு மனுவையும், முரு கனின் மேல் முறையீட்டு மனுவையும் ஒன்றாக விசாரிக்க வேண்டும் என்று நீதிபதி பாக்கியராஜ் உத்தரவிட்டார். ஆனால், எனது மேல் முறையீட்டு மனு தொடர்பான ஆவணங்கள் தொலைந்து விட்டதாக உயர்நீதிமன்ற அலுவலகம் சொல்லிவிட்டது! கடைசியில் என் மேல் முறையீட்டு மனுவை இணைக்காம லேயே முருகனின் மேல் முறையீட்டு மனு மட்டும் விசாரிக்கப்பட்டு, இறுதியில் வேறு நீதிபதியால் அவர் விடுதலை ஆகி விட்டார். 'நீதிபதி பாக்கியராஜ் போட்ட ஆணையைக் கண்டுபிடித்து, மறுபடியும் முழு விசாரணை நடத்த வேண்டும்' என்று இப்போது நான் உச்சநீதி மன்றம் சென்றி ருக்கிறேன். என் உயிருள்ள வரை போராடு வேன்'' என்று உறுதியான குரலில் சொல் கிறார் பழனிவேல்.

''கீழ் மட்டத்தில் காவல்துறையும் வழக்குகளை நடத்தும் அரசு வழக்கறிஞர் களும் நடந்துகொள்ளும் முறையால், செஷன்ஸ் நீதிமன்றங்களில் குற்றவாளிகள் விடுதலை செய்யப்படுகிறார்கள். மிக முக்கியமாக, அரசுத் தரப்புச் சாட்சிகள் பல்டியடிப்பதால், வழக்குகள் திசைமாறிப் போகின்றன. எல்லாம் பணம் படுத்தும் பாடு! காவல்துறை குறட்டை விடுவதன் காரணமாகக் கீழ் நீதிமன்றங்கள் மேல் முறையீட்டுக்குப்போவதுமில்லை. இறுதி யில் விடுதலை செய்யப்படும் குற்றவாளி கள், மற்றொரு திருமணத்தைச் செய்து கொண்டு குஷியாக வலம் வருகிறார்கள். இது அனேகம் வரதட்சணைக் கொலை வழக்குகளில் நடக்கிறது'' என்கிறார் பழனிவேலு.

ஆனால், பழனிவேலு அப்படி இருக்க விரும்பவில்லை. தமது போராட் டம் ஒரு பக்கம் இருக்க, வரதட்சணைத் தடுப்புச் சட்டம் தொடர்பான இரு பிரிவு களின் (304-B மற்றும் 498-A) கீழ் பதிவு செய்யப்பட்ட வழக்குகள் குறித்து, தகவல்

## -வலுவிழந்து போகும் வரதட்சணை வழக்குகள்...

அறியும் சட்டத்தைப் பயன்படுத்தி, அரசிடம் விவரம் கேட்டார். கிடைத்த பதில் அவரை அதிர்ச்சியடைய வைத்து விட்டது. இந்தப் பிரிவுகளில் பதிவு செய்யப்பட்ட குற்றங்களின் எண்ணிக்கை கடந்த பத்து வருடங்களில் இரு மடங்காக உயர்ந்திருக்கிறது! இ.பி.கோ. 304-B பிரிவின் கீழ் 1996 முதல் 2006 வரை 2496 வழக்குகள் காவல் துறையால் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இந்த வழக்குகளுள் 350 வழக்குகளில் தான் குற்றவாளிகளுக்குத் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. குற்றம் சாட்டப்பட்டவர்களுள் எண்பத்தைந்து சதவிகிதம் பேர் விடுதலை ஆகிவிட்டார்கள்!

இ.பி.கோ. 498-A பிரிவின் கீழ் அதே பத்து வருட காலத்தில் 4312 வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இவற்றில் 264 வழக்குகளில்தான் குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள்.

பத்து வருடங்களில் 304-B பிரிவின் கீழ் உள்ள வழக்குகளுள் இருபது கேஸ்களில் தான் காவல்துறை மேல் முறையீடு செய்திருக்கிறது. அதேபோல், 498-A பிரிவின் கீழ் உள்ள வழக்குகளில் 118 கேஸ்களில் தான் மேல் முறையீடு செய்திருக்கிறது.

கொந்தளிக்க வைக்கும் இந்த விவகாரங்களில் காவல்துறை சுணங்கிப் போயிருப்பது ஏன்? வழக்கறிஞரும் மனித உரிமை ஆர்வலருமான சுதா ராமலிங்கம் சொல்கிறார்:

"இந்தக் குற்றங்களில் செண்டிமெண்ட் ரொம்பவே விளையாடுகிறது. கணவனால் எரிக்கப்படும் பெண்கூட மரணப் படுக்கையில் வாக்குமூலம் கொடுக்கும் போது கணவனைக் காட்டிக் கொடுக்கத் தயங்குகிறார். ஒரு பெண் வரதட்சணைக் கொடுமையால் தற்கொலை செய்து கொண்டாலோ அல்லது கொலை செய்யப் பட்டாலோ, அந்தச் சூழலில் கொதித்து எழும் பெற்றோர், உறவினர்கள் காலப் போக்கில் 'போனவ போயிட்டா' என்று விரக்தி மனநிலைக்குச் சென்று, கோர்ட்டில் சாட்சி சொல்லும்போது பல்டியடித்து விடுவார்கள். அதனால், குற்றவாளிகளுக்குக் கொண்டாட்டம் தானே! இன்னொரு விஷயம், காவல்துறை வழக்குப் பதிவு



✱ சுதா ராமலிங்கம்

**"பெண் பல விஷயங்களை மனத்துக்குள் பூட்டி வைப்பதால்தான் பின்னர் பல குற்றவாளிகளுக்குத் தண்டனை வாங்கி கொடுக்க முடியாத நிலை இருக்கிறது!"**

செய்யும்போது கொலையோ தற்கொலையோ எதுவாக இருந்தாலும் அத்துடன் வரதட்சணைத் தடுப்புச் சட்டத்தை இணைத்து வழக்குப் பதிவு செய்ய வேண்டும். முறையாக, சரியான செக்ஷன்களில் பதிவு செய்யாமல் காவல்துறை கோட்டை விட்டு விடுகிறது. பாதிக்கப்பட்ட பெற்றோர்கள் சம்பவம் நடந்த போது குழப்பமான மன நிலையில் இருப்பதால், இந்த விஷயம் அவர்களுக்குத் தெரியாமல் போய் விடுகிறது. மேலும் பையன் குடும்பம் கொஞ்சம் செல்வாக்கோடு இருந்தாலும், பல விதங்களில் காவல் துறைக்கு அழுத்தம் வரும். விளைவு, கேஸ் பலவீனமாகும். அடுத்து, கேஸ் பதிவு செய்து சில நாட்கள் கழித்து 'பொண்ணு போயிட்டா... நாங்க வேண்டுமானால் நீங்க கொடுத்த பொருட்களை

வாங்கிக் கொடுத்து விடுகிறோம்' என்று காவல் துறை கட்டப் பஞ்சாயத்து நடத்தத் துவங்கி விடுகிறது.

கொலை அல்லது தற்கொலையில், ரெவின்யூ அதிகாரியின் விசாரணை அறிக்கையும் பல தவறுகளைக் கொண்டதாக இருக்கிறது. அரசுத் தரப்பு சாட்சிகளை சரியாகத் தயார்ப்படுத்துவதில்லை. இதனால் குற்றவாளிகள் விடுதலை ஆகிறார்கள்'' என்றும் சொல்கிறார் சுதா ராமலிங்கம்.

''செஷன்ஸ் கோர்ட்டுகளில் குற்றவாளிகள் பெருமளவில் விடுதலை ஆவதற்குக் காரணம் சாட்சிகள் அடிக்கும் பல்டிகள்



தான்! இதுபோன்ற வழக்குகளில், சம்பவங்கள் நான்கு சுவர்களுக்குள் நடப்பதால், நேரிடையான சாட்சியங்கள் மிகவும் குறைவாகவே இருக்கும். எனவே சுற்றுச் சூழல் சாட்சியங்களையே துணையாகக் கொள்ள வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர்கள் மீது கரிசனம் கொண்டோ அல்லது 'வேறு' பல காரணங்களுக்காகவோ சாட்சிகள் பல்டி அடித்து விடுகிறார்கள். இதனால் கேஸ் தோற்றுப்போய் குற்றவாளிகள் விடுதலை ஆகிறார்கள்.

இந்த நிலையில் பப்ளிக் பிராஸிக்யூட்டரின் கருத்துப்படி மேல் முறையீடு செல்வதற்கும், தகுதியான வழக்காக இல்லாமல் போய் விடுகிறது. பல கேஸ்களில் சம்பவம் நடந்த சில காலம் கழித்து பாதிக்



● சண்முகப்ரியா

கப்பட்டவர்களும், குற்றவாளிகளும், கோர்ட்டுக்கு வெளியே சமரசம் ஆகிவிடுகிறார்கள்'' என்கிறார் குற்றத் தொடர்வுத் துறையின் துணை இயக்குநர் கோபி. காவல் துறை வழக்குகளை முனைந்து நடத்த வழி காட்டுவது இந்தத் துறைதான்.

இந்த வகைக் குற்றங்கள் நடக்காமல் இருக்க என்ன செய்ய வேண்டும்? ''பெண்கள் அக்கம் பக்கங்களில் நல்ல உறவு வைத்துக்கொள்ள வேண்டும். உள்ளூரில் இருக்கும் மாதர் சங்கங்களோடு தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும். பெற்றோரிடம், எல்லா விஷயங்களையும் சொல்ல வேண்டும். பெண் பல விஷயங்களை மனத்துக்குள் பூட்டி வைப்பதால் தான் பின்னர் பல குற்றவாளிகளுக்குத் தண்டனை வாங்கிக் கொடுக்க முடியாத நிலை இருக்கிறது. பேச முடியவில்லை என்றால், கடிதம் மூலம் பெற்றோருக்குத் தகவல்களைச் சொல்லலாம்'' என்கிறார் சுதா ராமலிங்கம்.

- ப்ரியன்

அட்டை, வண்ணப்படம் : ஸ்ரீஹரி

# நான் ஏன் நடிக்க வந்தேன்?




தமிழ்ப் புத்தாண்டுக்கு 'சிவாஜி' ரிலீஸாகியிருந்தால் கூட இந்த அளவு விளம்பரம் செய்யப்பட்டிருக்குமா என்று தெரியவில்லை. இன்று திரும்பிய திசையெல்லாம் 'கானல் நீர்' விளம்பரம்தான்! அதிலும் பெரிய பெரிய சைஸில் ஆஜானுபாகுவாகத் தோற்றமளிக்கிறார் புதுமுக நாயகன் ரித்தீஷ். ''நம்ம படம் ரிலீஸான அன்னைக்குச் சொந்த ஊர்ல திருவிழா கூட்டம்ங்க. எல்லாம் என்னையப் பார்க்கத் தியேட்டருக்குத் திரண்டுட்டாங்க. படம் நல்லாப் போயிட்டிருக்கறதாப் பேசிக்கிறாங்க, சந்தோஷம்'' என்று சிரிக்கிறார் ரித்தீஷ்.

இளவயது அறிமுகமென்று இவரைச் சொல்ல முடியாது. நடுத்தர வயதில் ஹீரோவாகியிருக்கிறார். தெலுங்குப் பட நாயகன் மாதிரி முகவெட்டு. ''நான் இதுல ஹீரோ ரோலே பண்ணலீங்க; கேரக்டர் ரோல்தான்! நண்பனுக்காக உயிர் விடறேன்; அவ்வளவு தான். டைரக்டர் சின்னி ஜெயந்த் என்ன சொல்லிக் கொடுத்தாரோ அதைத்தான் செஞ்சேன். எனக்கு நடிக்கத் தெரியாது; டான்ஸ் ஆடத் தெரியாது; ஆனா ஃபைட் மட்டும் நல்லா பண்ணுவேன்.''

'எதுவுமே தெரியாம ஏன் சினிமாவுக்கு வந்தீங்க?' என்றால் ரித்தீஷ் சிரிக்கிறார்.

''நானா எங்க வந்தேன்... வரவழைச்சுட்டாங்க. என் நண்பர் மூலமா எனக்கு நண்பரானவர் சின்னி . கதையைச் சொல்லி 'சின்ன ரோல் இருக்கு, பண்றீங்களா?'ன்னு கேட்டார். அது அப்படியே வளர்ந்து கடைசில நானே கானல் நீர்ல மெயின் ஆயிட்டேன். எனக்கும் சினிமாவுக்கும் சம்பந்தமே இல்ல. என் தொழில் ரியல் எஸ்டேட்; அதை ஒழுங்காகக் கவனிச்சிட்டாலே போதும்.''

'கானல் நீர் உங்களுக்குத் திருப்தி தந்ததா?'

''முழுசா தரல. இன்னும் நல்லாப் பண்ணியிருக்கணும். இதுக்கு அவர் இவர்னு காரணங்களை அடுக்காம, அடுத்து இந்தத் தவறுகள் நிகழாமல் பார்த்துக்கணும்.''

'ஹீரோவா நீங்க நெறிப்படுத்தியிருக்கலாமே...' என்றால், ''முதல் படம்ங்க. டைரக்டர் விஷயத்துல வீணா தலையிட்டா நல்லா இருக்காது. அவங்க என்ன சொல்லிக் கொடுத்தாங்களோ அதைத்தான் பண்ணினேன். ஆனா இனி அப்படி இருக்காது'' என்ற ரித்தீஷ் அடுத்து தான் நடிக்கப் போகும் படத்தைப் பற்றியும் கூறத் தவறவில்லை.

''நான் ஹீரோவா பண்ற அடுத்த படம் பேச்சுவார்த்தைல இருக்கு. முதல் படத்துல காணப்பட்ட குறைகளையெல்லாம் நிவர்த்தி செஞ்சு பக்காவா ஒரு படைப்பைக் கொடுக்கப் போறேன். அதுதான் என்னோட கடைசிப் படமாவும் இருக்கும்.'' 'பக்'கென்றிருக்கிறது நமக்கு. 'இப்பத்தானே நுழைஞ்சீங்க...'

''ஆமா சார்... என் கனவு சினிமா இல்ல; ரியல் எஸ்டேட் பிசினஸ்தான். ஏதோ ஆசைப்பட்டேன்; ஒரு படம் பண்ணேன். அடுத்து சூப்பர்ஹிட் படம் ஒண்ணு கொடுத்து என்னை நிரூபிச்சுட்டுப் போக வேண்டியதுதான்-நம்ம வேலையைப் பார்த்துக்கிட்டு!''

- ஜானகி



முத்துராமன் திருநெல்வேலி ஜங்ஷனில் இறங்கியபோது, வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. மாநாடுகளுக்கும், மழைக்கும் பூர்வ ஜென்ம பந்தம் ஏதாவது இருக்கக்கூடும். அவனுக்கு நினைவு தெரிந்து கட்சி நடத்திய முக்கிய மாநாடுகள் அனைத்துக்கும் மழை ஒரு தூறல் அளவிலாவது சாட்சியாக இருந்திருக்கிறது. பலத்த மழை பொழியும்போதுதான் மேடையில் தலைவர்களுக்கு வீரம் அதிகரித்தது.

எல்லாம் மாநாடு தொடங்கியதற்குப் பிறகுதான். ஏற்பாடுகளின்போது மழை

வருவது என்பது மாவட்டச் செயலாளர்கள் வயிற்றில் புளியைக் கரைக்கும். லட்சக்கணக்கில் பணத்தைக் கொட்டி, அங்கே இங்கே அலைந்து திரிந்து ஆபத்துக்கு பாவம் பார்க்காமல் பொண்டாட்டி, மாமியார், சொத்துவரை விற்று, காசைக் 'கட் அவுட்'டுகளாக்கி, கலையுணர்வை வெளிப்படுத்தும் செயல்வீரர்கள். போட்ட காசை எடுத்துவிட முடியும்தான், மாநாடு ஒழுங்காக நடந்து முடிகிற பட்சத்தில்.

தன் பின்னால் ஒரு மாபெரும் சமூகம் அணிதிரள்கிறது என்கிற நினைவு தரக்கூடிய பலம் இவ்வளவு அவ்வளவு அல்ல. அது அதிர்ஷ்டத்தில் வந்ததல்ல. கால்நடையாகக் கட்சிக் கூட்டங்களுக்குப் போன காலத்திலிருந்து, கார்களின் அணிவகுப்புக் காலம் வரை உழைத்த உழைப்புக்குக் கிடைத்த வெற்றி.

முத்துராமனின் அப்பா பல முறை சொல்லியிருக்கிறார். ஒவ்வொரு மாவட்டச் செயலாளருக்கும் அந்தக் கனவு இருக்கும். அது மாநிலத்தின் தலைவராகும் கனவு. ஒவ்வொரு மாநாட்டின்போதும் அந்தக் கனவு, பரிணாம வளர்ச்சி கொண்டு வீதி உலா போகும். தலைவனின் அருகே நிற்கும் வாய்ப்பு மாநாட்டை முன்னின்று நடத்தும் மாவட்டச் செயலாளருக்கே கிடைக்கும். பக்கத்தில் நிற்கும் தலைவரை மானசீகமாக சற்று நகர்த்தி வைத்துவிட்டு, அந்த இடத்தில் தன்னைப் பொருத்திப் பார்க்காத மாவட்டச் செயலாளர் இந்தியத் துணைக் கண்டத்தில் எங்கும் இருக்க முடியாது.

**“நம்மூர்ல நேக்கு தெரிஞ்சவன் ரொம்ப கம்மி... உச்சத்துக்குப் போறதுக்கு ஒரு அதிர்ஷ்டம் வேணும்.”**

'மேலுக்கு வரணும்னு ஆசைப்படாத மாவட்டச் செயலாளர் இருக்க முடியாது முத்து. எத்தினி உழைக்கிறோங்கறதைப் பொருத்த விசயம் அது. ஆனா ஒண்ணு, அரசியல் வேணாம்னு ஒதுங்கின காலத்துல நான் புரிஞ்சுக்கிட்டது அதுக்கு உழைப்பு மட்டும் போறாதுங்கிறது. எல்லாத்துக்கும் மேல ஒரு நேக்கு வேண்டியிருக்குதுடா. மாவட்டச் செயலாளர்னா ஒரு அந்தஸ்து எம்.எல்.ஏ. அது ஒரு அந்தஸ்து. அதுக்கு மேலே மினிஸ்டர் ஆவுறதுக்கு, கட்சியில் முக்கியஸ்தர் ஆவுறதுக்கு, இன்னதுதான் செய்ய வேண்டியிருக்கும்னு சொல்ல முடியாது. சில பேருக்கு குத்தாலச் சாரல் மாதிரி பருவம் தப்பாம தானாக் கிடைச்சுடும். இன்னும் சில பேரு சிங்கியடிச்சு மூக்கால அழுது காரியத்தை சாதிச்சுக்குவான். நம்மூர்ல நேக்கு தெரிஞ்சவன் ரொம்ப கம்மி. மேல வரதுக்குள்ள முழி பிதுங்கிறும். உச்சத்துக்குப் போறதுக்கு ஒரு அதிர்ஷ்டம் வேணும்.

முத்துராமன் இமைக்காமல் கேட்டுக்

# கொசு 18

**பா.ராகவன்**



> "எதுக்கு இன்ஸ்பெக்டர் வேஷம் போட்டுக்கிட்டு அலையற?"
>
> "எவ்வளவு காலத்துக்குத்தான் மாமூல் கொடுத்துக்கிட்டே இருக்கிறது? மாமூல் வாங்கணும்னு எனக்கு மட்டும் ஆசையிருக்காதா? அதான்!"
>
> - எம்.அசோக்ராஜா

கொண்டிருந்தான். அப்பா சொல்வது சரியாகவே இருக்கக்கூடும். ஆனால், அதிர்ஷ்டத்தின் பங்களிப்பை யார் தீர்மானிப்பது? சில அதிரடி நடவடிக்கைகள் தீர்மானிக்கலாம்; சாமர்த்தியமான தகிடுதத்தங்கள் தீர்மானிக்கலாம். மேலிடத்துக்கு நெருக்கமாவது என்பது அறுபத்து ஐந்தாவது கலை. 'எப்படியாவது அதைப் பிடிக்காமல் விடக்கூடாது' என்று அப்போது முடிவு செய்ததுதான்.

ஜங்ஷனில் இறங்கியதும் ஸ்டேஷனிலேயே பல் தேய்த்து, காபி சாப்பிட்டான். ஊருக்குப் போகும்போது சாந்திக்கு மறக்காமல் இருட்டுக்கடை அல்வா வாங்கிச் செல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். அம்மாவுக்குக் கொடுத்தாலும் அல்வா இனிக்கத்தான் செய்யும். ஆனால், சாந்திக்கு வாங்கிச் செல்ல வேண்டும் என்று நினைக்கும்போது தனக்கே அல்வா இனிப்பதை சிறு புன்னகையுடன் நினைத்துப் பார்த்தான். வெளியே வந்து பஸ் பிடித்து, அரை மணியில் பாளையங்கோட்டையில் இறங்கினான். போஸ்டர்கள் ஒட்ட ஆரம்பித்திருந்தார்கள். சாலையோரங்களில், 'கட்-அவுட்'டுகளுக்கான கட்டைகள் குவித்து வைக்கப்பட்டிருந்தன. மாட்டு வண்டிகளில், பிளாஸ்டிக் நாற்காலிகள் போய்க்கொண்டிருந்தன. திருவிழாதான்; சந்தேகமேயில்லை!

வழியில் தென்பட்ட மாநகராட்சி நவீன குளியலறையில் இரண்டு ரூபாய் கொடுத்துக் குளித்துவிட்டு வெளியே வந்து வெள்ளைச் சட்டை, கட்சி வேட்டிக்கு மாறினான். ஓட்டலில் இட்லி சாப்பிட்டுவிட்டு காசு கொடுக்கும் இடத்தில் கிண்ணத்தில் இருந்த விபூதியை எடுத்து நெற்றியில் பூசிக் கொண்டான். எம்.எல்.ஏ. கொடுத்தனுப்பிய ஃபைல் பத்திரமாக இருக்கிறதா என்று ஒரு முறை பார்த்துக்கொண்டான். எடுத்து, பிரித்துப் பார்க்க விருப்பம்தான். தயக்கமோ என்னவோ தடுத்தது. அநேகமாக பயமாக இருக்கலாம். யாருக்குத் தெரியப்போகிறது? படித்துத்தான் பார்ப்போமே என்றும் உள்ளுக்குள் ஒரு குட்டிச்சாத்தான் குரல் கொடுத்தது. பசி தீர்ந்ததும் புத்தி வேலை செய்கிறது என்று நினைத்துக்கொண்டான்.

ஓட்டலைவிட்டு வெளியே வந்து, பஸ் ஸ்டாண்டை ஒட்டிய குட்டிச்சுவரில் சாய்ந்தபடி பையிலிருந்து ஃபைலை எடுத்தான். பிரித்ததும் நிறைய எண்கள் கண்ணில் பட்டன. வசூல் விவரம். புரட்டப் புரட்ட, சில அறிக்கைகள், குறிப்புகள், கணக்குகள், மேலும் கணக்குகள் என்று பக்கங்கள் நீண்டன. இதெல்லாம் எப்போதும் இருப்பதுதானே? தலைபோகிற முக்கியம் என்று வேலைமெனக்கெட்டு தன்னைக்கூப்பிட்டுக் கொடுத்தனுப்புவானேன்?

முத்துராமனுக்குப் புரியவில்லை. அலுப்புடன் ஃபைலை மூடி பையில் வைத்தான். கட்சிக்கொடி கட்டிய ஜீப் ஒன்று சாலையில் விரைந்து கடந்தது. மாநாடு நடக்கவிருக்கும் இடலுக்கு வழி கேட்டுக்கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

ஒன்றிரண்டு தூறல்கள் விழுந்தன. இடலில் கூரை வேய்ந்துகொண்டிருந்த உழைப்பாளிகள் அண்ணாந்து வானத்தைப் பார்த்தார்கள். முத்துராமன் அருகே சென்று ஓர் ஆளைப் பிடித்தான்.

"வணக்கங்க. என் பேரு முத்துராமன்.

மெட்ராஸ்லேர்ந்து வரேன். எம்.எல்.ஏ. தங்கவேலு அனுப்பினாரு'' என்று சொன்னான்.

அந்தத் தொண்டன் அவனை ஏற இறங்கப் பார்த்தான். ''சொல்லுங்க.''

''இங்க மாவட்டச் செயலாளரப் பாக்கணும். ஒரு ஃபைலு கொடுத்தனுப்பி விட்டிருக் காரு.''

''அண்ணன் இவ்ளோ நேரம் இங்கதான் இருந்தாப்ல. இப்பத்தானே போனாக.''

அண்ணன்கள் பெரும்பாலும் இப்படித்தான். தொண்டர்கள் தேடும்போதுதான் கிளம்புகிறார்கள். எங்கே பிடிக்கலாம் என்று முத்துராமன் கேட்டான்.

''வீட்டு அட்ரஸ் தாரேன். ஆனாக்க, இப்ப அங்க இருப்பாருன்னு சொல்ல முடியாது.''

''வேற?''

''மோகனசுந்தரம் கடைகிட்ட போய்ப் பாருங்க'' என்று அவன் சொன்னான். விலாசம் கொடுத்து வழியும் சொன்னான்.

ஆனால், மோகனசுந்தரம் யாரென்பதையோ, அவருடையது என்ன கடை என்பதையோ அவன் சொல்லவில்லை. சரவண பவன் மாதிரி போலிருக்கிறது என்று நினைத்துக்கொண்டான்.

அவன் அந்த முகவரியைக் கண்டுபிடித்துப் போய்ச்சேர மணி பதினொன்றரை ஆகிவிட்டது. வருவது போல் இருந்த மழை இப்போது இல்லை. வெயிலடித்தது; வியர்த்தது; களைப்பாக இருந்தது. மோகனசுந்தரத்தின் கடையில் குறைந்தபட்சம் தனக்கொரு கோலி சோடாவாவது கிடைக்கும் என்று நினைத்திருந்தான். ஆனால், அது ஒரு காயலான் கடையாக இருக்கும் என்று அவன் எண்ணிப் பார்க்கவில்லை. மாவட்ட அளவில் பிரசித்தி பெற்ற காயலான் கடை போலிருக்கிறது. மாவட்டச் செயலாளர் உட்கார்ந்து மந்திராலோசனை செய்யுமளவுக்கு உள்ளே இடவசதி வேறு இருக்கிறது.

கடை வாசலில் தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு 'அண்ணனைப் பாக்கணும்' என்று சொன்னபோது தடை ஏதும் இல்லாமல் பின்புறம் அனுப்பிவைத்தார்கள். 'சென்னைத் தூதுவன். வரவேற்பு எப்படி இருக்கப்போகிறது?' ஆவலுடன் அந்தக் கடையைச் சுற்றிக் கொண்டு பின்னால் போனான்.

வழி முழுக்க பழைய செய்தித்தாள்கள். பழைய இரும்பு, ஈயம் மற்றும் பித்தளைப் பாத்திரங்கள், உடைந்த பஜாஜ் ஸ்கூட்டரின் உதிரி பாகங்கள், க்ரீஸ் பூசிய சுவர்கள், பான்பராக் கறை படிந்த தரை, ஈக்களின் சாம்ராஜ்ஜியம். ஈரப்பதம் மிகுந்த சுற்றுச் சூழல். நடன நங்கையின் நளினத்துடன் எதையும் மிதித்துவிடாமல் சுற்றிக்கொண்டு மந்திராலோசனை மண்டபத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது, 'செவிட்டு மூதி! கேக்கறன்ல? வாயத் தொறந்து பதில் சொல்லுல. நீ பேசாட்டி வீட்டுக்கு நீ போவ மாட்ட; ஒம் பொணந்தாம்ல போவும்.''

முத்துராமன் சூழல் புரியாமல் தயங்கி நின்றான். கோவக்கார எம்.எல்.ஏ. போலிருக்கிறது. ஒரு வேளை, கோலி சோடா கிடைக்காமல் போகலாம்.

(தொடரும்)

''மன்னா
எதிரிநாட்டு மன்னன்
போரை
நிறுத்திவிட்டு, நம்
ராணியைக் கடத்திச்
சென்றுவிட்டான்.''

''ஆஹா!
தொடர்ந்து இரண்டு
இன்ப அதிர்ச்சிகளா!''

- கி.ச.திலீபன்





# வாய்ப் புற்று

''புகையிலை உடலுக்குக் கெடுதல். தொடர்ந்து சிகரெட் போன்றவற்றைப் பிடித்தாலோ, பான்பராக் போன்ற புகையிலையின் பிற வடிவங்களை வாயில் மென்று கொண்டே இருந்தாலோ அது வாய்ப் புற்று நோய்க்கு வழி வகுக்கக் கூடும்...''

இதெல்லாம் யாருக்குத்தான் தெரியாது?

''ஆனால் இதெல்லாம் தெரிந்திருந்தும் அவர்களால் அந்தப் பழக்கங்களிலிருந்து மீண்டு வர முடிவதில்லை என்பதுதான் சிக்கல்'' என்றார் பல்சிகிச்சை மருத்துவர் டாக்டர் சந்திரகுப்தா.

''புகையிலையால் பற்களில் நீக்க முடியாத கறை ஏற்படும். பெரும்பாலும் அப்படிப்பட்ட நிலையில்தான் பல் மருத்துவரை நாடுவார்கள்.''

பத்து வருடங்களுக்கும் அதிகமாக சிகரெட் புகைப்பவர்கள், பதினைந்து வருடங்களாகப் பான்பராக் போட்டுக் கொள்ளும் பழக்கம் கொண்டவர்கள் - இவர்களுள் பாதிப் பேருக்காவது வாய்ப் புற்றுநோய் ஏற்பட வாய்ப்பு மிக அதிகம் என்ற திடுக்கிடும் விவரத்தையும் கூறினார் டாக்டர் சந்திரகுப்தா.

''இருந்தாலும் கெட்டதிலும் நன்மை என்பது போல் இதில் ஒரு விஷயம் உண்டு. மற்ற வகைப் புற்றுநோய்களைச் 'சட்'டென்று உணர முடியாது. ஆனால் வாய்ப் புற்றுநோய் முதலிலேயே சில அறிகுறிகளைக் காட்டும். முதல் அறிகுறி இது தான்: வாயில் வெள்ளையாகவோ சிகப்பாகவோ நிறம் மாறிய திசுக்கள் தோன்றும். இவற்றை precancerous lesions என்போம். வாயை முழுவதுமாகத் திறக்க முடியாது. (நான்கு விரல்களை நெடுக்கு வாக்கில் வைத்துக்கொண்டு வாய்க்குள் செலுத்த முடிந்தால்தான் வாயை முழுவதுமாகத் திறக்க முடிந்ததாக அர்த்தம்). காரணம் அங்குள்ள திசுக்கள் இறுகிக் கொள்வதுதான். மசாலா உணவு வகைகளைச் சாப்பிட்டால் ஈறுகளில் எரியும் உணர்ச்சி தோன்றும்.

''கூரான பற்கள், சரியாகப் பொருந்தாத பற்களைக் கவனிக்காமல் விடுவது ஆகியவற்றின் காரணமாகவும் வாய்ப் புற்றுநோய் வரலாம்.

''வெற்றிலை பாக்கு போடும் பழக்கம் உள்ளவர்கள், தங்கள் வாய் இடுக்கில் மாட்டிக் கொண்ட வெற்றிலை, பாக்குத் துண்டுகளை அகற்ற பற்குச்சிகளைப் பயன்படுத்தக் கூடும்; இது ஈறுகளைப் பாதிக்கலாம். இதைத் தொடர்ந்து ஈறில் எலும்பு இழப்பு தோன்றலாம். பல்லே விழுந்து விடவும் வாய்ப்பு உண்டு.

''புகைப் பிடிக்கும் பழக்கம் உள்ளவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தத் துவங்கி, நான்கிலிருந்து ஆறு மாதங்களில் இந்தப் பழக்கத்தை முழுவதுமாக விட்டுவிட வேண்டும். இதற்கு மாற்றாக சூயிங்கம், சாக்லேட் ஆகியவற்றை வாயில் போட்டுக் கொள்ளலாம். புகையிலை அளிக்கும் அதே இன்பத்தை அளிக்க வல்ல புகையிலை கலவாத மெல்லும் மாத்

திரைகளும் இப்போது உள்ளன.

கான்ஸர் இன்ஸ்டிட்யூட் இதற்கென்றே 'டி அடிக்‌ஷன்' மையங்களைத் தொடங்கியிருக்கிறது. இங்கு 'சைக்கோ ஆன்காலஜிஸ்ட்' என்ற சிறப்பு மருத்துவர்கள் பணியாற்றுகிறார்கள்.

''பான் பராக், சிகரெட் போன்ற பழக்கத்தை விடமுடியாமல் தவிப்பவர்களுள் நம் நாட்டில் ஆண்களே மிக அதிகம். அதேசமயம் கட்டுமானப் பணிகளில் ஈடுபட்டுள்ள பெண் தொழிலாளிகள் பலருக்கும்கூட வாய்ப்புற்று நோய் வருகிறது. பசியை அடக்கிக் கொள்ள இவர்கள் புகையிலையை மெல்லும் பழக்கம் கொண்டவர்களாக இருப்பதனால்தான் இந்த நிலை!

''போனவாரம்கூட என் வீட்டு பால்கனியில் நின்று பார்த்தபோது ஒரு காட்சி தென்பட்டது. ஒரு தாத்தா புகைத்துக் கொண்டிருக்க, அருகில் அவரது ஒரு வயதுப் பேத்தி இருமிக் கொண்டிருந்தாள். அந்தத் தாத்தா இப்படி யோசித்திருக்க வேண்டும். 'ஒருவேளை நான் புகைத்து, அந்தப் புகையை பேத்தியும் சுவாசிப்பதால் தான் அந்த இருமலோ?'. ஆம், passive smoking காரணமாகவே

# வராமலிருக்க...

அந்தச் சிறுமி இருமிக் கொண்டிருக்க வாய்ப்பு உண்டு.

''இப்போதெல்லாம் 'ரிவர்ஸ் ஸ்மோக்கிங்' என்கிற, சிகரெட்டின் எரியும் பகுதியை வாய்க்குள் வைத்து ஊதும் வழக்கம் இளைஞர்களிடையே அதிகமாகி வருகிறது. இது ரொம்ப ஆபத்தானது. அண்ணத்தில் (pallet) புற்றுநோய் உருவாக இது வழிவகுக்கும்.

''பொதுவாக வாய்க்குள் மேற்கண்ட மாற்றங்கள் காணப்பட்டால், மருத்துவரை அணுக வேண்டும். தவிர, வாயில் பதினைந்து நாட்கள் சிகிச்சைக்குப் பிறகும் ஆறாத ரணங்கள் இருந்தாலோ, நாக்கை வெளியே நீட்ட முடியாமல் போனாலோ, உணவை விழுங்கும் போதெல்லாம் தொண்டை வலி ஏற்பட்டாலோ பல் மருத்துவரை அணுகுவது அவசியம்!

மே முப்பத்தொன்று புகையிலை எதிர்ப்பு தினம். இதையே ஒரு வாய்ப்பாகக் கருதி புகையிலைக்கு டாட்டா காட்டிவிடலாமே!'' என்கிறார் டாக்டர் சந்திரகுப்தா.

– ஜி.எஸ்.எஸ்.



# எம்.பி.க்கள் ஆள் கடத்துவது பற்றி...?

1 ● **பாலா கண்ணன், பேட்டை புதூர்** ★

*? முதல்வருக்கு இலங்கைப் பிரச்னையில் அதிக ஆர்வம் இருப்பதைப் பற்றி?*

! கூடவே புலிகள் மீது அனுதாபமும் இருப்பதுதான் சிக்கல். சமீபத்தில் தமிழக மீனவர்கள் சிலர் கொல்லப்பட்டதும் பன்னிரண்டு பேர் சிறைப் படுத்தப் பட்டதும் விடுதலைப்புலிகளால்தான் என்பது உறுதியான போது அவருக்கு ஒரே அதிர்ச்சி! இனியேனும் அவர் அணுகுமுறையில் மாற்றம் உருவானால் நல்லது.

2 ● **ஜோ.பன்னீர்செல்வம், சென்னை - 12** ❒

*? 'ஒரு மோதிரத்துக்காக இருபது டன் மண்வெட்டி எடுக்கப்படுகிறது; அதனால் தங்கம் வாங்குவது பாபச் செயல்' என்று பசுமைத் தாயகம் அமைப்பு அக்ஷய திருதியையையொட்டி விழிப்புணர்வு பிரசாரம் செய்தது எடுபடுமா?*

! மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை - மூன்றும் உதவாது என்று வேத காலம் தொட்டே கூறப்பட்டு வருகிறது. ஆனால், எடுபடவில்லையே! மக்கள் அனைவரும் துறவிகளாகிவிட முடியாது; அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சுதான் என்று உணர்ந்தால் போதுமானது.

3 ● **த.பரதன், திருவாரூர்**

*? ப்ரியங்கா, தம்மை இனி பிரியங்கா காந்தி என்றே அழைக்க வேண்டும் என்று கூறியுள்ளதுபோல் சோனியாவும் ராகுலும் கூறுவார்களா?*

! ப்ரியங்கா தமது கணவர் பெயரால் தாம் அழைக்கப்படுவதை விரும்புவதில் வியப்பில்லை. ஆனால் நேரு குடும்பத்தின் காந்தி பெயர், ஃபெரோஸ் காந்தி என்று பெயர் கொண்ட இந்திராவின் கணவர் காரணமாகத் தொடர்கிறது. அது இந்திராவிடமும், ராஜீவிடமும், சோனியாவிடமும், ராகுல்விடமும் ஒட்டிக்கொண்டது தவறல்ல; நியாயமே.

★ பழைய சபதம்!



4 ● **ஜெ.ஜெயராணி, மதுரை - 4**

*? ''காவிரிப் பிரச்னையில், ஆகாத ஊருக்குப் போகாத வழி சொல்கிறார் ஜெயலலிதா'' என்று துரைமுருகன் கூறியுள்ளது பற்றி...?*

! இன்றுவரை, போகிற வழி காவிரி அன்னைக்கு மட்டுமே தெரிந்திருக்கிறது. மற்ற எல்லோரும் கூறுவன குழப்படி ரூட்கள்தான்!

5 ● **சிவ. இராமலிங்கம், ஆத்தூர்**

*? எம்.பி.க்கள் வெளிநாடுகளுக்கு ஆள் கடத்துவது குறித்து...?*

! நம் நாட்டின் மான-மரியாதையையும் சேர்த்துக் கடத்திவிட்டார்கள்.

6 ● **மு.பெரியசாமி, விட்டுக்கட்டி**

*? அரசியலில் அமையவிருக்கிற மூன்றாவது அணி பற்றி?*

! இன்றைய மத்திய கூட்டணி ஆட்சியில் பல குறைபாடுகள் உண்டு. ஆனால் ஜோதிபாசு சரியாகக் கூறியிருப்பது போல, இந்தக் கூட்டணி உடைந்தால் மதவாத சக்திகளே பதவிக்கு வரும். மூன்றாவது அணி, மதச்சார்பற்ற அணியின் வோட்டுகளைப் பிரிக்கும் என்பதால் 'ஜெ' வுடைய முயற்சி ஆபத்தானது.

# நீங்கள் கேட்டவை - தராசு





✱ ஆபத்து முயற்சி!

✱ அனுதாபப் பிரச்னை!

7 ● கி.துரைசாமி, மங்கலப்பட்டி

? கலையும் இலக்கியமும் வரலாறுகளைப் படைக்குமா?

! இதில் என்ன சந்தேகம் அய்யா? உயர்ந்த கலைஞர்களும் இலக்கிய கர்த்தாக்களும் தங்கள் படைப்புகள் மூலம் வரலாறு காண்கிறார்கள். அவர்கள் உருவாக்கிய கலை, இலக்கியங்களும் சமுதாயத்தில் ஏற்படுத்தும் மாற்றங்கள் மூலம் வரலாறு படைக்கின்றன.

8 ● மல்லிகை மன்னன், மதுரை

? பெரியார் சிலையை உடைத்ததை, 'பண்பாடு இல்லாத செயல்' என்று கண்டிக்கும் கருணாநிதி, அந்தணர்களின் பூணூலையும் குடுமியையும் அறுத்தெறிந்த பகுத்தறிவு வாதிகளின் பண்பாடற்ற செயலைக் கண்டிக்கவில்லையே, இது எந்த வகையில் நியாயம் தலைவா?

! ஒரு குற்றம் இன்னொரு குற்றத்தை ஒருபோதும் நியாயப்படுத்தாது! கருணாநிதி கண்டித்தாலும் கண்டிக்காவிட்டாலும் குற்றம் குற்றமே!

9 ● என். சண்முகம், சேலம் - 1

? ''கள்ளச் சாராயத்தை ஒழிக்க முடியாது என்று சவாலாகச் சொல்கிறேன்'' என முதல்வர் கருணாநிதி சொல்வதில் நியாயம் உண்டுதானே?

! ஏன் முடியாது? எத்தனையோ இலவசங்களோடு, சாராயப் பாக்கெட்டும் மொந்தைக் கள்ளும் குடும்ப அட்டைகள் வைத்திருப்போருக்கு ரேஷன் கடைகள் மூலம் விநியோகித்தால் கள்ளச் சாராயம் காணாமல் போய் விடாதா! - இதை நான் சவாலாகச் சொல்லவில்லை;வேதனையுடன் எழுதுகிறேன்.



✱ ப்ரியப்பட்ட பெயர்!

✱ சர்வாதிகாரத் தேர்தல்!



10 ● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

? பாகிஸ்தானில், இவ்வாண்டு இறுதியில் நடைபெறும் தேர்தல் சுதந்திரமாகவும் நேர்மையாகவும் வெளிப்படையான முறையிலும் நடைபெறும் என அதிபர் முஷாரஃப் கூறுகிறாரே?

! அந்தத் தேர்தலின் முடிவில் சர்வாதிகாரி முஷாரஃப், சுதந்திரமாகவும், நேர்மையாகவும்



* குழப்படி ரூட்கள்!

வெளிப்படையாகவும் தமது சர்வாதிகாரத்தை மேலும் பலப் படுத்திக் கொண்டவர் ஆவார்!

11 ● ஆர்.ராஜதுரை, சீர்காழி

? நாகை மாவட்டத்தில் ரூ 750 கோடி செலவில் அமைக்கப்படும் புதிய துறைமுகத்துக்கு 'திருக்குவளை துறைமுகம்' என்று பெயர் சூட்டப்படுமாமே?

! வரலாற்றைத் திரித்து எழுதி வந்த அரசியல்வாதிகள், பூகோளத்தையும் இப்போ மாற்றி எழுத ஆரம்பிச்சாச்சு...என்ன செய்ய! நம்ம தலையெழுத்து இப்படி இருக்கு!

12 ● ஜெகா, கும்பகோணம்

? மனிதக் கழிவை மனிதனே அகற்றும் பணியிலிருந்து துப்புரவுத் தொழிலாளர்களை விடுவித்து, மாற்றுத்தொழில் வாய்ப்பு வழங்கப் படுவதாகப் பிரதமர் அறிவித்திருப்பது பற்றி...?

! இருபத்தைந்து ஆண்டுகளாக முழங்கப்பட்டு வரும் சபதம்! எத்தனை பிரதமர்கள், எத்தனை முதலமைச்சர்கள், எத்தனை உள்ளாட்சித் துறைத் தலைவர்கள் வந்து போயாச்சு....! ஸாஃப்ட்வேர் துறை வளரும் வேகத்தில் கழிப்பறை இயக்கம் நாட்டின் மூலை-முடுக்கு வரை பரவினாலன்றித் தீர வில்லை.



* நகைச் சுதந்திரம்!

13 ● எம். பாஸ்கர், திண்டுக்கல்

? "ஒரு பெண் நிறைய நகைகளுடன் சுதந்திரமாக அ.தி.மு.க ஆட்சியில் நடமாட முடிந்தது. ஆனால், இந்த ஆட்சியில் இப்போது அது இல்லை" என்று முன்னாள் அமைச்சர் ஜெயகுமார் சொல்கிறாரே?

! ஆமாம், ஒரு பெண்ணும் அவர் தோழியும் ஓர் அ.தி.மு.க ஆட்சியில் நிறைய நகைகளுடன் சுதந்திரமாக நடமாடினார்கள். அதன் பிறகுதான் எல்லாமே மாறிவிட்டது! ○

---

**வாசக தராசுகளே!**

இந்த வாரக் கேள்விகளுக்கான பதில்களுள் சிறந்தது எது என்று தேர்ந்தெடுத்து, அதன் எண்ணை அஞ்சலட்டையில் எழுதி அனுப்புங்கள். மிக அதிக வாக்குகள் பெற்ற கேள்வியைக் குறிப்பிட்டு எழுதும் யாரேனும் ஒருவருக்கு, குலுக்கலில் பரிசு ரூ 100/- கடைசித் தேதி: 14.5.07 ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

22.4.07 கல்கி இதழில் இடம் பெற்ற தராசு பதில்களுள் மிகச் சிறந்ததாக நீங்கள் தேர்வு செய்த பதில்: எண் 7

பரிசு பெறுபவர்: எல்.மாறன், மேல்பட்டி

☐ ரூ 100 பரிசு பெறுபவர்:

ஜோ.பன்னீர்செல்வம்,
பழைய எண் 63,
சுப்பராயன் செட்டி ஐந்தாவது தெரு,
நம்மாழ்வார்பேட்டை,
சென்னை 600 012

★ ரூ 50 பரிசு பெறுபவர்:

பாலா கண்ணகி,
மே/பா. இ. தங்கமணி,
1-பி, மாரப்பன் வீதி, பரமத்தி ரோடு,
ச.பே.புதூர்,
நாமக்கல் 637 001

வளம் தரும் கோயில் 5

# பெருமிதம் பேசும் படிகள்!

* ஸ்ரீ எறும்பீஸ்வரர்



பழந் தமிழ்நாட்டில் கோயில்கள் கட்ட எடுத்துக்கொண்ட சிரமமும் முயற்சிகளும் பிரமிப்பூட்டுகின்றன. மன்னர்களும் வள்ளல்களும் அக் கோயில்களைப் பாதுகாப்பதற்காக எழுதி வைத்த சட்டதிட்டங்களோ ஆச்சர்யமளிக்கின்றன!

எறும்பீசுவரர் திருக்கோயில் கல்வெட்டு என்ன சொல்கிறது பாருங்கள்:

கி.பி.961-ஆம் ஆண்டில் (அதாவது சுந்தர சோழனின் ஐந்தாம் ஆட்சியாண்டில்) ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, அதன்படி இக் கோயில் நிலங்களுக்கு வரிகள் விதிக்கக் கூடாது என்று ஆணை பிறப்பிக்கப்பட்டதாம்! மீறி வரி விதித்தாலோ, கோயில் சொத்துக்களைக் கையாடினாலோ, ஊரிலிருந்து அந் நபர் தள்ளிவைக்கப்படுவார்!

இதை அறிகிறபோது 'கோயில் சொத்துக்களைக் கையாடும் அவலம் அன்றே இருந்திருக்கிறது!' என்று நமக்கு வருத்தம் ஏற்படக்கூடும்... ஆனால் இந்தக் கல்வெட்டுச் செய்தியைப் பாருங்கள்:

ராஜராஜ சோழன் இக் கோயிலுக்குத் திருத்தலப் பயணம் வந்திருக்கிறான். எறும்பியூர் ஈசனை வழிபட்டதோடு அல்லாமல், தனது முப்பாட்டன் காலம் முதல் வழங்கப் பெற்ற நிவந்தங்கள் (எழுதி வைக்கப்பட்ட சொத்து, நில வருமானம் முதலானவை) ஊர்ச் சபையினரால் முறையாகப் பராமரிக்கப் பட்டு, கோயிலுக்கு வழங்கப்பட்டு வருகின்றனவா என விசாரணை நடத்தி திருப்தி அடைந்திருக்கிறான். 'காளி' என்ற பெய



சீதா ரவி

ருடைய ஒரு தணிக்கை அதிகாரியையும் நியமித்து, இந்தக் கணக்கு வழக்குகளைக் கவனிக்க ஆணையிட்டிருக்கிறான்! கையாடலைத் தவிர்க்க சட்டதிட்டம் இயற்றியதோடு மட்டுமின்றி நேரடி நடவடிக்கையும் எடுத்திருக்கிறார்கள் அன்றைய ஆட்சியாளர்கள்! இத்தனைக்கும் இக் கோயில் ராஜராஜ சோழனுக்குப் பலப்பல தலைமுறைகளுக்கு முந்தைய மன்னர்களால் கட்டப்பட்டது. கட்டியவர் சோழ வம்சத்தவரா என்பதெல்லாம் பொருட்டில்லை... கோயிலைப் பேணுதலே முக்கியமாக இருந்திருக்கிறது!

இத்தனை செய்திகளும் இதற்கு மேலும் பல அரிய வரலாற்றுக் குறிப்புகளும், திருச்சி அருகே உள்ள திருவெறும்பூர் எறும்பீசர் ஆலயத்தின் கல்வெட்டுகளில் காணக் கிடைக்கின்றன.

திருச்சி - தஞ்சாவூர் சாலையில் பி.எச்.ஈ.எல். டவுன்ஷிப்புக்கு முன்னதாக, ஒரு சிறு குன்றின் உச்சியில் அமைந்திருக்கிறது எறும்பீசர் கோயில். மலைப் படிகளில் வெறுங்காலுடன் ஏறிச் செல்ல வேண்டும் என்பதால் அதிகாலையிலேயே செல்வது நல்லது.

படிகள் ஏறுவதற்குச் சுலபமாக அகன்று அமைந்திருக்கின்றன. தமிழ்நாட்டுக்குப் புகழ் சேர்த்த மன்னர்கள் ஏறிச்சென்ற படிகள் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும் - தேவார மூவரும் மாணிக்கவாசகரும்கூட இப் படிகளில் ஏறிச் சென்று எறும்பீசரையும் அவன் உடன் உறை நறுங்குழல் நாயகியையும் வழிபட்டு, பக்திப் பெருக்கில் பாடியிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டு ஏறுகிறபோது, ஒவ்வொரு படியும் ஒரு புதிய பெருமிதத்தைப் பேசுவதாகவே நமக்குத் தோன்றும்.

குன்றின் மேல் உள்ள சமதளத்தைப் பயன்படுத்தி அற்புதமான கோயில் ஒன்றை அமைத்த நம் முன்னோர்களின் அழகுணர்ச்சியைச் சொல்வதா அல்லது இறைவிக்கு நறுங்குழல் நாயகி என்று பெயரிட்ட கவிதை உணர்வை வியப்பதா? மிகப் பெரிய கோட்டைச் சுவரைப் போன்ற நுழைவாயிலுக்குள் சென்று படி ஏறும்முன், சுவரில் எழுதி வைத்துள்ள தேவாரம் கண்ணில் படுகிறது:

*இன்பமும் பிறப்பும் இறப்பினொடு*
*துன்பமும் உடனே வைத்த சோதியான்*
*அன்பனே அரனே என்று அரற்றுவார்க்கு*
*இன்பனாகும் எறும்பியூர் ஈசனே*

இறப்பையும் துன்பத்தையும் இன்பத்துக்கு இணையாக வைத்துக் கொண்டாடிய இந்த வைராக்கியம்தான் இக் கோயிலை அமைப்பது போன்ற மிகக் கடினமான பணிகளை மேற்கொள்ள நம் முன்னோர்களுக்கு உந்து சக்தியாக இருந்திருக்க வேண்டும்!

அந்த வைராக்கியத்தில் ஒரு துளி இருந்தால் நாம் வேகமாகப் படிகளை ஏறிப் போய்விடலாம்.

''ஆரம்பத்தில் செங்கல் கட்டுமானமாகத்தான் இருந்தது - இக் கோயில்'' - மேல் தளத்தை அடைந்ததுமே நம்மை வரவேற்று மகிழும் அன்பர் சண்முகவேல் தெரிவிக்கிறார். கி.அமர்நாத் ராமகிருஷ்ணா என்பவருடன் இணைந்து திருவெறும்பூர் குறித்த விரிவான திருத்தல வரலாற்று நூலை எழுதித் தயாரித்து வருகிறார் சண்முகவேல்.

தன்னார்வத்தால் இக் கோயிலின் பணிகளில் ஈடுபட்டு, இங்குள்ள குழந்தைகளுக்குத் திருமுறைப் பாடல்களும் கற்றுத் தந்து கொண்டிருக்கிறார் இவர்.

இவரிடம் பயிலும் சிவரஞ்சனியும் சாந்தினியும் நாம் கோயிலைச் சுற்றி வருகையில் கூடவே ஓடி வருகிறார்கள்.

வெளித் திருச்சுற்றில் தென்றல்காற்று தவழ்ந்து வருகிறது. நந்தி மண்டபத்துக்கும்

**தேய் பிறை அஷ்டமி அன்று இங்குள்ள பைரவரைப் பூஜித்தால் தோஷங்கள் நீங்கும் என்கிறார்கள். வைகாசி விசாகம் இங்கே திருவிழாக் காலம்.**



* நறுங்குழல் நாயகி

துவஜஸ்தம்பத்துக்கும் நேரே, சுற்றுச் சுவரில் உள்ள செவ்வகச் சாளரம் வழியே பிரம்ம தீர்த்தம் வெயிலில் ஜொலிப்பது தெரிகிறது. பிரம்மா இங்கே பூஜை செய்து பாபம் நீங்கப் பெற்ற புராணக் கதை இருக்கிறது.

திருச்சுற்று மதில் மேல், அழகான வரிசையில் நந்திகள். அவற்றின் நிழலில் ஒடுங்கிக்கொண்டு மைனாக் குருவிகள் அதட்டலான குரலில் ஏதோ பேசிக் கொண் டிருக்கின்றன. பி.எச்.ஈ.எல். நிறுவனம் முயற்சி எடுத்து அமைத்த நந்தவனத்தில், (பாறையைப் பூச்சொரியும் பூமியாக மாற்றியிருக்கிறார்கள்.) அரளி, நந்தியா வட்டை, விருக்ஷிப் பூ, நீலத்திலும் வெள்ளையிலும் சங்கு புஷ்பங்கள் என்று மலர்கள் சிரிக்கின்றன.

துவஜஸ்தம்பத்தில் விநாயகர், முருகன், ரிஷபாரூடருடன் உழவாரம் தாங்கி திரு நாவுக்கரசரின் உருவமும் இருக்கிறது. இன்றைய நவீன உழவாரப் படையாளி சீதாலக்ஷ்மி அம்மாள்! கால் நூற்றாண்டுக் காலமாக இக் கோயிலைச் சுத்தம் செய்து வரும் பணியாளர். முதிர்ந்த வயதிலும் படி யேறி வந்து கடமையைச் சிறப்பாகச் செய்து கொண்டிருக்கிறார்.

உள் பிராகாரத்தில் மின் வசதி இருந்தால் மட்டுமே தெளிவாகப் பார்க்க முடியும். விதானத்தில் அமைந்துள்ள குறுகிய கம்பிக் கிராதி வழியே இலேசான வெளிச்சமே உள்ளே வருகிறது. கோஷ்ட சிற்பங்கள் அரிய அழகுடன் காணப்படுகின்றன. விநாயகர், தக்ஷிணாமூர்த்தி, சங்கரநாராயணர், பிரம்மா, மஹிஷாசுரமர்த்தினி கோலத்தில் துர்கை - என்று ஒவ்வொருவரிடமும் ஒரு தனிப் புதுமை இருப்பது கவனித்துப் பார்த்தால் தெரியும். கிராதி வழியே சூரிய கிரணங்கள் திருச்சுற்று தெய்வங்களின் மீது படுகிறபோது அவை உயிர்க் கொண்டன போல் ஜீவனுடன் ஜொலிக்கின்றன.

பிராகார தெய்வங்கள் வழக்கமான முறைப்படி அமைப்பட்டிருக்கின்றனர். அவர்களுடன் சமயக்குரவர் நால்வரும் சப்த மாதாக்களும் உண்டு.

எறும்பீசர் சன்னதி சிறியதாக, ஆனால் உயரமாக இருக்கிறது. லிங்க வடிவம் வழக்கமான 'மொட்டை' அமைப்பில் இல்லாமல், மேடு பள்ளங்களோடு ஒரு பக்கம் சாய்ந்து காணப்படுகிறது. சுயம்பு. இந்த லிங்கத்துக்கு அபிஷேகம் கிடையாது. கீழே அதனைச் சுற்றியுள்ள ஆவுடையாருக்கு மட்டும்தான் அபிஷேகம்.

கரன், தூஷணன், திரிசரன் என்ற அரக் கர்கள் இங்கே வழிபட்டுக் கொண்டிருந்த போது இந்திராதி தேவர்களும் வந்தார் களாம்! அரக்கர்களோடு சேர்ந்து வழிபட இஷ்டப்படாமல் தவித்திருக்கிறார்கள். இறைவன் அவர்களை எறும்புகளாக மாறி வந்து பூஜிக்குமாறு சொன்னதுடன், அந்தச் சிறு ஜீவன்கள் ஏறி வருவதற்கு வசதி யாகத்தான் ஒரு புறம் சாய்ந்தவாறு நிற்கிறான் என்பது புராணக் கதை.

அர்ச்சகர் வடமொழியிலும் தமிழிலும் தனித்தனியே அர்ச்சனை செய்து பிரஸாதம் தருகிறபோது இரட்டிப்பு சந்தோஷம் ஏற் படுகிறது. கூட வந்து நிற்கும் சிறுமிகள் தேவாரம் பாடுகிறார்கள் - புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டுதான்!

நறுங்குழல் நாயகி என்பதற்குப் பெயர்க் காரணம் ஏதும் வரலாறு - புராணங்களில் காணப் படவில்லை என்கிறார் சண்முக நாதன். எறும்பீசர் என்ற பெயருடன் பொருந்தும் ஒலி நயமிருந்தால் கவிதை படைக்கச் சௌகரியமாக இருக்கும் என்பதால்கூட நறுங்குழல் நாயகியாக அவள் அழைக்கப்பட்டிருக்கக் கூடும்!

*பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசீர்க்*
*கறங்கு பூத கணமுடைக் கண்ணுதல்*
*நறுங்கு மூல்மட வாளொடு நாடொறும்*
*எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே*
- இதுவும் நாவுக்கரசர் பாடியதே.

இந்த நறுங்குழல் நாயகி மேலும் பல நறுமலர்கள் சூடிக்கொண்டு தெற்கு நோக்கி நிற்கிறாள். இவளுக்குப் பின்புறம் சற்று தூரத்தில் மலைக்கோட்டை - அங்கே தாயுமானவர் என்னும் மாத்ருபூதேசுவரரின் அம்பாள் சுகந்த குந்தளாம்பிகை - தமிழில் மட்டுவார்க்குழலி! (மணம் வீசும் கூந் தலழகி). இந்தப் பிரதேசத்தில் வளரும் நறும்பூக்களின் மணத்தை இவ் விருவரும் மொத்தக் குத்தகை எடுத்துக்கொண்டு விட்டார்கள் போலிருக்கிறது!

எறும்பியூர் அம்பாள் விக்ரஹம் பின்னமாகிப் போனதால் புதிதாகச் செய்து கருவறையில் வைத் துள்ளார்கள். ஆதியில் இருந்த விக்ரஹம் கருவறை மண்டபத்தி லேயே இன்னமும் அலங்காரத்துடன் இருக்கிறது.

இந்த அம்பாளும் திருச்சி மாவட்ட வழக்கப்படி மேல் திருக்கரங்களில் தாமரை மொட்டுகள் ஏந்தி, கீழ்த் திருக்கரங்களை அபய-வரதங்களாகக் கொண்டிருக்கிறாள்.

மலர்களின் மணத்தோடு அர்ச் சனைக் குங்குமத்தின் மணமும் அவள் அருளின் மணமும் அவளது தனிக்கோயில் சன்னிதியில் கமழ் கின்றன.

வீட்டில் எறும்புத் தொல்லை இருந்தால் இந்த ஈசனுக்கு வேண்டிக்கொள்ளும் வழக்கம் சில குடும்பங்களில் இருக்கிறது. வேறு சிலர், தேய் பிறை அஷ்டமி அன்று இங்குள்ள பைரவரைப் பூஜித்தால் தோஷங்கள் நீங்கும் என்கிறார்கள். வைகாசி விசாகம் இங்கே திருவிழாக் காலம். பழைமையான தேர் இருக்கிறது. அதனைச் செப்பனிட்டு ஓட்டும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

வேண்டுதலுடன் போனாலும் போக லாம்; திருவிழாவுக்குச் சென்றும் மகிழ லாம். வெறுமே மனத்தை ஆனந்தத்தில் நிறைத்துக்கொள்ளவும் திருவெறும் பூர் போகலாம்... திருச்சி பக்கத்துக் கோயில்களுக்குப் போகும்போது இந்த எறும்பீசர் ஆலயத்தையும் உங்கள் யாத் திரைப் பட்டியலில் மறக்காமல் சேர்த்துக் கொள்ளுங்கள்.

*தொடர்புக்கு :* **சண்முகவேலு,**
**செல் : 9842467140**

*படங்கள் :* **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

● கொடி மரம்






## திருநெல்வேலி, மதுரை, திண்டுக்கல்

அன்பு வாசகர்களே!

கல்கி நிறுவனத்திலிருந்து மதிப்புமிக்க வாசகர்களாகிய உங்களைச் சந்திக்க உங்கள் ஊருக்கே வருகிறது கல்கி ஆசிரியர் குழு. இந்தச் சந்திப்பில் நீங்கள் உங்கள் குடும்பத்தோடு அவசியம் கலந்து கொண்டு, 'கல்கி' வார இதழைப் பற்றிய உங்களுடைய மேலான யோசனைகளையும் கருத்துகளையும் பரிமாறி, ஆக்கபூர்வமான யோசனைகளின் மூலம் கல்கி இதழை மேலும் மிளிரச் செய்ய உதவ வேண்டுகிறோம்.

இதயத்தை இதமாக்கும் 'கலகல' நிகழ்ச்சிகளும், இன்ப அதிர்ச்சியூட்டும் பரிசுப் போட்டிகளும் உண்டு. உங்கள் ஊருக்கு நாங்கள் வரும் தேதியை இன்றே உங்கள் நாட்குறிப்பில் குறித்து வைத்துக் கொள்ளுங்களேன்!

- ஆசிரியர் குழு




### திருநெல்வேலி

இடம் : ஹோட்டல் ஆரியாஸ், மதுரை ரோடு
தேதி : 12.05.2007
நேரம் : மாலை 4.30 மணி

### மதுரை

இடம் : ஹோட்டல் பிரேம் நிவாஸ், 102, மேலப் பெருமாள் மேஸ்திரி வீதி, பழைய தங்கம் தியேட்டர் அருகில்
தேதி : 13.05.2007
நேரம் : மாலை 4.30 மணி

### திண்டுக்கல்

இடம் : வி.ஜி.எஸ். மீட்டிங் ஹால், பேருந்து நிலையம் அருகில்
தேதி : 14.05.2007
நேரம் : மாலை 4.30 மணி

### புதுச்சேரி

இடம் : அன்னை வரவேற்பு இல்லம், 54, நடுத்தெரு, புதுச்சாரம்,
தேதி : 19.05.2007
நேரம் : மாலை 4.30 மணி

### விழுப்புரம்

இடம் : ஹோட்டல் உட்லேண்ட்ஸ், திருச்சி மெயின் ரோடு (சிக்னல் அருகில்)
தேதி : 20.05.2007
நேரம் : மாலை 4.30 மணி

**விரைவில் மற்ற ஊர்களிலும்...**

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

13. 5. 2007 இணைப்பு

## உள்ளே...

**2**



உன்னத உறவைச் சொல்கிறார்...

**10**



காலத்தை உணர்த்துகிறார்!

**12**



இருதயத்துடன் பேச வைக்கிறார்...

**13**



அன்பை அள்ளித் தருகிறார்!

# ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்



# உன்னத

கும்பகோணம், பாபனாசத்தில் பிறந்தவர் ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர். இன்று அவரது 51வது வயதில் உலகின் சிறு மூலைகளிலும் அறியப்பட்டு குருவாக விளங்குகிறார். தனிமனித ஏற்றத்துக்காக மட்டுமின்றி சமுதாய மறுமலர்ச்சிக்கும் உயர்வுக்கும் இவருடைய இயக்கம் பணியாற்றி வருகிறது. ஆன்மத் தேடல் என்பது ஒரு சிலருக்கு மட்டுமே கிடைக்கும் வாய்ப்பு என்பதை உடைத்தெறிந்து, தன்னையும் தன்னைச் சுற்றி உள்ளவர்களையும் மேம்படுத்த உதவும் வாழும் கலை (Art of Living) பயிற்சியை வகுத்தளித்தவர் ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர். அதைப் பரவலாக்கி வருவதன் மூலம் இலட்சக்கணக்கான சராசரி மனிதர்களின் வாழ்க்கையில் அர்த்தமுள்ள மாற்றங்களை விளைவித்திருக்கிறார். அவருடைய ஆங்கில நூல்களான Wisdom for the New Millennium, Celebrating Silence ஆகியவற்றிலிருந்து சில கருத்துகளின் மொழி பெயர்ப்பு:

## காதலும் துறவும்!

ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஆழ்ந்த ஏக்கம் இருக்கிறது - உறவுக்கான ஏக்கம். அந்த உறவு அல்லது பந்தம் அமைந்து விட்டால் ஏக்கம் தீர்ந்து விடுவதில்லை! அந்த உறவு என்றென்றைக்கும் நீடிக்க வேண்டும் என்ற கவலையுடனான ஏக்கம் பிறந்து விடு



கிறது!

காதலோ, அன்போ, பாசமோ, - அது அழியாமல் நீடிக்க வேண்டுமே என்கிற கவலையில், காதலின் மகிழ்ச்சியையே மறந்து விடுகிறோம்! இந்தக் கணத்தில் அன்பு செலுத்துகிறோம்; காதலிக்கப்படுகிறோம் என்கிற திருப்தி கூட கிட்டாமல் போய்விடுகிறது! துணைவரிடமிருந்து எப்போதும் பாதுகாப்பும், அன்பும், அரவணைப்பும் எதிர்பார்த்துக் கொண்டேயிருப்பது நம்மை பலவீனப் படுத்தும்.

# உறவு!



கொடுப்பது, பெறுவது என்ற இரு முனைகளுள் பெறுகிற முனையில் மட்டுமே இருக்கிறபோது, பலவீனப் பட்டுப்போய் தகாத உணர்வுகளுக்கு நீர் வார்க்கிறோம். பொறாமை, கோபம் போன்ற இந்த உணர்வுகள் அன்பையே அழித்துவிடும்!

உண்மையான அன்பும் காதலும் நம்மை பந்தப்படுத்துவதில்லை; விடுதலை செய்கின்றன. இந்த விடுதலையில்தான் காதலும் அன்பும் முழுமையுற முடியும். காதலின் உயர் நிலையில் நின்று அன்பைப் பொழிவதும் துறவின் உச்சத்தில் நின்று தேவைகள் அற்று நிம்மதியாக இருப்பதும் முரண்பட்ட நிலைகள் அல்ல. இவை இரண்டும் ஒரே நாணயத்தின் வெவ்வேறு பக்கங்கள்தான்.

## தியானம்!

தியானம் என்பது ஒரு தொடர் முயற்சி. நமக்குள் இருக்கும் அன்பு என்கிற உயர் நிலையில் ஆழப் புகுந்து பார்ப்பதே தியானம். வெறுமே கண்ணை மூடிக் கொண்டு உட்கார்வதோ, பகல் கனவு காண்பதோ, தூங்கிப் போவதோ தியானம் அல்ல! கடலின் ஆழம் போல் நமக்குள்ளும் ஓர் ஆழம் இருக்கிறது. அதில் நிறைய செல்வங்கள் இருக்கின்றன. நம் ஒவ்வொருவருக்குள்ளும் கொள்ளை கொள்ளையாக அழகு குவிந்திருக்கிறது. இவற்றையெல்லாம் தொட்டுப் பார்த்து, உணர்ந்துகொள்வதே தியானம். இத்தகைய தியானத்தின் மூலம் அன்பைக் கிளர்ந்தெழச் செய்து வாரி வழங்க முடியும்; நாம் விரும்புகிற சூழலையே நம்மால் உருவாக்கிக் கொள்ள முடியும். உறவுகளின் உன்னத நிலைகளைத் தொட முடியும்.

## கொண்டாட்டம்!

ஆண்டுக்கொருமுறை புத்தாண்டு கொண்டாடி மகிழ்பவன் ஏழை. ஒவ்வொரு நாளும் புத்தாண்டின் மகிழ்ச்சியை அனுபவிப்பவன் பணக்காரன். ஆனால் ஒவ்வொரு கணமும் புதிதெனக் கொண்டாடுபவனே மிகப் பெரிய செல்வந்தன்.

நீங்கள் ஏழையா? பணக்காரரா? அனை



வரினும் மிகப் பெரிய செல்வந்தரா...? கணத்துக்குக் கணம் கொண்டாடினால் நீங்களே சிருஷ்டியின் அதிபதி ஆவீர்கள்!

## திளைப்பு!

மகிழ்ச்சித் திளைப்பில் இருக்கிற போது நமக்கு எந்தக் குறைகளும் கண்ணில் படுவதில்லை. ஆனால் எல்லாமே கச்சித மாக இருக்கிறதா என்று புலனாய்வு செய்ய ஆரம்பித்தால் மகிழ்ச்சியின் ஊற்றுக்கண் அடைத்துப்போகும். உலகம், மேல் பார் வைக்குக் குறைகள் நிரம்பியதாகத் தோன்றும். ஆனால் உள்ளுக்குள்ளே எல் லாமே கச்சிதமாக, துல்லியமாக இருக்கின் றன. ஒழுங்கும் கச்சிதமும் எப்போதுமே மறைந்து ஒளிந்து பொதிந்து கிடக்கும்; குறைபாடுகளே வெளிப்படையாகப் பட்ட வர்த்தனமாகத் தெரியும்.

மேலெழுந்தவாரியாக எதையும் பார்க் காமல் ஆழத்துக்குப் போய் ஆராய வேண்டும். ஏராளமான நிகழ்வுகளுக்கும் சலனங்களுக்கும் மத்தியிலும் நமது பிரக்ஞை என்பது அசைக்க முடியாத உறுதி யுடன், ஒழுங்கு மாறாமல் இருப்பது புரியும். இதை உடனே உணர்ந்து கொள்ள முற்படுங் கள்.

## முதல் கடமை!

உலகுக்கு நாம் ஆற்ற வேண்டிய முதல் கடமை சேவை. நம் வாழ்வில் குழப்பமோ அச்சமோ ஏற்பட காரணம் இந்த சேவை முனைப்பு இல்லாததுதான். 'சேவைக் காகவே நான் இங்கே இருக்கிறேன்' என்கிற உணர்வு 'நான்' என்கிற அகந்தையைக் கரைக்கும்; கவலைகளைக் கரைத்துவிடும்.

சேவை என்பது நமக்குச் சௌகரியமாக இருக்கிறபோது, நமது திருப்திக்காகச் செய்யும் காரியம் அல்ல. வாழ்வின் இறுதி நோக்கமே சேவை செய்வதுதான். இந்த இலக்கு இருந்தால் அச்சம் அழியும், அறிவும் சிந்தனையும் குவியும், வாழ்க்கை அர்த்தமுள்ளதாகும்.

## சத்சங்கம்!

மனிதர்கள் வாழ ஏன் வீடு தேவைப் படுகிறது. விலங்குகள் போல் அவர்களால் காடுகளில் வாழ முடிவதில்லையே, ஏன்?...

பருவநிலை மாற்றங்கள், இயற்கை சீற் றங்களிலிருந்து நமக்குப் பாதுகாப்பு தேவைப்படுவதால்தான் வீடுகளை அமைக் கிறோம்.

உடல் பாதுகாப்புக்காக வீடுகளை நாடு வதுபோல், ஆன்ம பாதுகாப்புக்காகவும் சிந்தனையைப் பாதுகாக்கவும் சத்சங்கத்தை நாட வேண்டும். சத்சங்கம் என்பது நமக்குப் புகலிடம். வாழ்வின் ஏற்றத் தாழ்வுகளி லிருந்து நமக்குப் பாதுகாப்பு தரும் புகலி டம். அதை நாடாத வன் விலங்கு போல் திரிய நேரும். சத்சங்கம் என்கிற கூட்டில் இளைப்பாறும்போது அமைதி மீள்கிறது.



**எடுத்துத் தொடுத்தவர்: சீதா ரவி**

# முஹம்மது நபி (ஸல்)

இறைவனின் இறுதி தூதர் முஹம்மது நபி(ஸல்). அவர், ஒரு மனிதன் எப்படி நற்பண்புகளுடன் வாழ வேண்டும் என்பதை வாழ்ந்துக் காட்டியவர். பெரியவர்கள் மட்டுமல்லாமல் சிறுவர்களும் நற்பண்புகளோடு வளர்வதெப்படி எனக் கற்றுக் கொடுத்தவர். இவர் குழந்தைகள் மீது பேரன்புக் கொண்டவர்.

பிள்ளைகளுக்கு நல்ல பழக்க வழக்கங்கள் கற்றுக் கொடுப்பது ஒவ்வொரு பெற்றோரின் கடமை. அது பிஞ்சு மனதில் பசு மரத்தாணி போல பதிந்து, அவர்களின் வாழ்க்கையும் செழிப்பாக அமையும் என்கிறார் நபி (ஸல்). அவரின் அறிவுரைகளில் சில:

★ பிறருக்கு உதவுதல், தர்மம் செய்தல் போன்ற நற்செயல்களைச் செய்ய வேண்டும். பெற்றோர்கள் தர்மத்தைக் குழந்தைகளின் கைகளால் செய்ய வேண்டும்.

★ சகோதர, சகோதரிகள் உணவைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். அதனால் குடும்பத்தாருடன் என்றும் உறவாடியிருக்கலாம்.

★ பிள்ளைகளின் தேவையான, நியாயமான ஆசைகளை நிறைவேற்ற வேண்டும். அவர்களின் மனோ இச்சைகள் அனைத்தையும் நிறைவேற்றுவது தவறு. அது அவர்களின் நற்குணம் கெட்டுப் போக வாய்ப்பை உண்டாக்கும்.

★ கோபம் கொள்ளுதல், அதனால் அடித்தல், பொருட்களை உடைத்தல், பொய் கூறுதல், அதிகம் ஆசைப்படுதல், கோள் சொல்லுதல், பிறர் பொருள் மீது ஆசைக் கொள்ளல், தன் குற்றத்தை மறைத்தல், வீணாகப் பேசுதல், பிறர் மனம் நோக கேலி செய்தல், ஏமாற்றுதல், தீயது என உணராதிருத்தல் போன்ற தவறுகளில் இருந்து விலகி இருக்க வேண்டும்.

★ பிள்ளைகள் ஓய்வு நேரங்களில் நல்ல புத்தகங்களைப் படிக்க வேண்டும். இதனால் சிந்தனை வளரும், அதிக விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம்.

★ உடலுக்கு ஆரோக்கியமும் சுறுசுறுப்பும் தரும் நல்ல விளையாட்டுகளில் ஈடுபட வேண்டும்.

# குழந்தைகளும் பெரியவர்களும்!



தொகுத்து அளித்தவர் : சஜ்ஜாத்



## ஸ்ரீ காளஹஸ்தி

# மூன்று பக்தர்கள்!



திருப்பதியிலிருந்து சுமார் முப்பது கி.மீ. தொலைவில் உள்ளது இந்த இடம்.

ஸ்ரீ என்றால் சிலந்தி, காள என்றால் யானை, ஹஸ்தி என்பது பாம்பு. இது குறித்து ஒரு வரலாற்றுக் கதையுண்டு!

இவை மூன்றும் சிவனின் பக்தர்கள். அவ்வூரில் உள்ள சிவலிங்கத்திற்கு சிலந்தி தினமும் தனது வலையின் மூலம் தடுப்புச் சுவர் எழுப்பி லிங்கத்தின் மீது வெயிலும் மழையும் அண்டாமல் செய்துவிட்டு வெளியே செல்கிறது. அதன்பின் வரும் யானையானது அந்த வலையை தூசு என எண்ணி சுத்தம் செய்து, தனது தும்பிக்கையால் லிங்கத்திற்கு தண்ணீர் விட்டு பூஜிக்கிறது. பிறகு அங்கே வரும் மூன்றாவது பக்தனான பாம்பு, யானை அபிஷேகம் செய்த தண்ணீரை பார்த்து அவ்விடம் அசுத்தமாக இருப்பதாக எண்ணி, சுத்தம்



செய்து தனது மாணிக்கக் கல்லை அங்கு விட்டுச் செல்வதன் மூலம் தனது பக்தியைக் காட்டுகிறது.

மறுநாள் அங்கே வரும் சிலந்தி அது மாணிக்கக் கல் என அறியாமல் அதை அப்புறப்படுத்தி மீண்டும் சிவனின் மேனியை சூரியனிடமிருந்து காக்க வலையை பின்னுகிறது. இந்நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெறுகிறது.

ஒரு நாள் இவை மூன்றும் அடுத்தவர் செயல்பாட்டை அறியும் பொருட்டு காத்திருக்கின்றன. மூன்றின் சந்திப்பும் சண்டையில் தொடங்கி இறுதியில் மடிகின்றன. இம்மூன்றுக்கும் சிவபெருமான் மோட்சத்தை அளிக்கிறார். இதுவே ஸ்ரீ காளஹஸ்தியின் பெயர் காரணம்.

★ ★ ★

இந்த ஸ்ரீ காளஹஸ்தி கோவில் பாழடைந்து உள்ளதை கண்ட ராஜா ஒருவர் அதை புதுப்பிக்க எண்ணி கட்டுமானப் பணிகளை செய்து வந்தார். பணி நடக்கும்



சமயம் திடீரென கஜானா காலியானதால் ராஜா கவலையுடன் இரவு படுக்கச் சென்றார். அன்று இரவு சிவபெருமான் ராஜாவின் கனவில் தோன்றி, 'கட்டுமானப் பணியை தொடர்ந்து செய். அன்றன்றைய பணி முடிந்ததும் வேலை செய்தவர்களை அருகில் இருக்கும் ஆற்றுக்கு வந்து தோண்டச் சொல். அவரவருக்கான கூலி தங்கமாகக் கிடைக்கும்' என்று கூறினாராம். அதன்படி மறுநாளில் இருந்து வேலை நடந்து நல்லபடியாக கட்டுமானப் பணி அனைத்தும் முடிந்தது. அந்தந்த நாளின் இறுதியில் அருகிலிருந்த முகி ஆற்றுக்குச் சென்று தோண்டியவர்களுக்கு யார் எவ்வளவு வேலை செய்தார்களோ, அதற்கான கூலி சொர்ணமாக கிடைத்தது. சொர்ணமாகிய தங்கம் முகி ஆற்றின் பரப்பிலிருந்து கிடைத்ததால் அந்த ஆறு 'சொர்ணமுகி' என்று அழைக்கப் பெற்றது.

கேட்டு எழுதியவர் : சுகுணா ஸ்ரீனிவாசன்



# பாலும் பாரமும்!



ஒரு மரத்திலுள்ள கனியைக் கல்லால் அடித்து வீழ்த்தி உண்பதை விட அது கனிந்து வீழ்ந்த பிறகு எடுத்துண்ண வேண்டும். அதுபோல் பிறர் வற்புறுத்தலால் செய்கிற தர்மத்தைவிட, உன் மனம் கனிந்து மற்றவர்களுக்குக் கொடுக்கிற தர்மம் சிறந்தது. தாய் குழந்தைக்குப் பால் கொடுப்பதால் அவளது பாரமும் குறைகிறது. குழந்தைக்கு மகிழ்ச்சியும் ஏற்படுகிறது. அதுபோல அன்னதானத்தால் உன் வினைப்பாரமும் குறைகிறது. மற்றவர்களுக்கும் மகிழ்ச்சி ஏற்படுகிறது.

- பங்காரு அடிகளார்

# பணமும் உணவும்!



பணம் எவனுக்கு அடிமையோ, அவன்தான் உண்மையான மனிதன். பணத்தை எப்படி உபயோகிப்பது என்பதை அறியாதவர்கள் மனிதர்கள் என்று அழைக்க அருகதி அற்றவர்கள். பணத்தினால் உணவை மட்டும்தான் பெற முடியுமே தவிர, ஆத்ம ஞானத்தை அல்ல.

- பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ணர்

# துளிகள்...

## உடலும் மனமும்!



சிலவகை உணவுகள் மனத்தில் குறிப்பிட்ட மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. இதை நாம் அன்றாடம் காண்கிறோம். சிலவகை உணவுகள் உடலில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றன நாளடைவில் மனத்தையும் பெருமளவிற் குப் பாதிக்கின்றன. இதை அரிந்து கொள்வது மிகவும் இன்றியமை யாதது. நமது துன்பங்களில் கணிச மான அளவு, நாம் உண்ணும் உணவின் காரணமாகவே வரு கின்றன.

- சுவாமி விவேகானந்தர்

## ஆசையும் பொறுமையும்!



மக்களிடம் எண்ணற்ற ஆசைகளும் தேவை களும் இருக்கின்றன. அவற்றை அவர்கள் வெகு விரைவில் பூர்த்தி செய்ய விரும்புகிறார்கள். பலனைப் பெற விரும்பும் அவர்களிடம் அதைப் பெறுவதற்காக பாடுபடும் பொறுமை இல்லை. இத்தகைய பொறுமையின்மை பொருந்தாத பலனையே தரும்.

- மாதா அமிர்தானந்தமயி

படித்துத் தொடுத்தவர் : எஸ்.ஸ்டீஃபன்





# காலம்...அகாலம்!

## அன்னை ஸ்ரீ சாரதா தேவி

ஒருமுறை உத்போதகன் என்ற பக்தர் தனது தாயை அன்னையிடம் கூட்டிச் செல்ல எண்ணினார். ஆனால் நாள் சரியில்லை என்று தாய் மறுத்துவிட்டார். இதனை அன்னையிடம் தெரிவித்த போது, அதற்கு அன்னை, ''மகனே! நாளும் கோளும் பார்க்காமல் தீர்த்தத் தலங்களுக்குப் போனால், ஏற்கெனவே சம்பாதித்து வைத்துள்ள புண்ணியம் போய்விடும் என்பார்கள். அதே வேளையில், நல்ல காரியங்களைத் தள்ளிப்போடக் கூடாது என்றும் சொல்கிறார்கள்'' என்றார்.



இதை மேலும் தெளிவாய்ப் புரிந்துக் கொள்ள, பக்தர் அன்னையிடம், ''இந்த மாதிரி நேரங்களில் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். அதற்கு அன்னை, ''அகால வேளையில் தீர்த்தத் தலங்களுக்குப் போகக் கூடாது என்று சிலர் கூறுவார்கள். காலம், அகாலம் என்றெல்லாம் கணக்கிட்டு, நல்ல காரியத்தைத் தள்ளி வைக்கலாம். ஆனால் காலன், காலம் - அகாலம் கணக்கெல்லாம் பார்த்தா வருகிறான்? மரணத்திற்கு எப்படி குறித்த நேரம் இல்லையோ, நல்ல காரியத்திற்கும் நேரம் குறித்துக் கொண்டிருப்பது நல்லதல்ல. வாய்ப்பு கிடைக்கும் போது, காலம், அகாலம் பற்றியெல்லாம் சிந்திக்காமல் நல்ல காரியங்களை உடனே செய்துவிட வேண்டும்'' என்றார்.

- அன்னை ஸ்ரீ சாரதா தேவியின்
அன்பு மொழிகள் என்ற நூலிலிருந்து:

**மேலும் சில அன்னை அருள்மொழிகள் :**

* *மனிதனால் இயற்கைக் குணங்களை விட முடியாது. அப்படி இயற்கைக் குணங்களைவிட்டு இறைவனை யார் வழிபடுகிறார்களோ, அவர்களை நான் வணங்குகிறேன்.*

* *சிலரது இயல்பைக் கண்டால் விலகத் தோன்றுகிறது. இன்னும் சிலரைக் கண்டால் நேசிக்கத் தோன்றுகிறது. இவ்வுலகில் குணங்களால் தான் எல்லாம் அமைகிறது.*



**படித்து எடுத்தவர் : வெ.ஜனனி**

# திராட்சை ரசம்!

## இயேசு

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பாலகனாக கன்னியின் வயிற்றில் பிறந்தார் இயேசு. இயேசுவின் பிறப்புக்கு சுமார் எழுநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாகவே, இப்படி பிறப்பார் என்று தீர்க்கதரிசி ஏசாயா அவர்களால் முன்னறிவிக் கப்பட்டு, இயேசுவின் பிறப்பு நடந்தேறியது.



இயேசு தனது பன்னிரண்டாம் வயதிலே தேவாலயத்தில் உபதேசிக்கத் தொடங்கினார். அன்பை போதித்தார். தன்னைப் போல் பிறரையும் நேசிக்க வேண்டும், தேவன் அன்பாய் இருக்கிறார்; நீங்களும் ஒருவரில் ஒருவர் அன்பாய் இருங்கள்; உங்களை சபிக்கிறவர்களைச் சபிக்காதீர்கள்; அவர்களை ஆசீர்வதியுங்கள் என்றும் போதித்தார். அவரைப் பார்த்த யோவான் ஸ்தானகன் என்ற பக்தன் 'பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி' என்று இயேசுவை பிரசங்கித்தான்.

இயேசு தான் வாழ்ந்த நாட்களில் பிணியாளிகளை குணப்படுத்தினார். சுமார் ஐந்தாயிரம் பேர்களுக்கு ஐந்து அப்பத்தையும் இரண்டு மீன்களையும் ஆசீர்வதித்துக் கொடுத்து, அத்தனை பேரின் பசியையும் போக்கினார். தான் சென்ற ஒரு கல்யாண வீட்டில் திராட்சை ரசம் தீர்ந்து போயிற்று. அதை அறிந்த இயேசு, தண்ணீரை திராட்சை ரசமாக மாற்றி பந்தி விசாரிப்புகாரரிடம் கொடுத்தார்.

அரசாங்கத்துக்கு தாம் வரிகட்ட வேண்டும் என்பதற்காக மீன் வயிற்றிலிருந்து வெள்ளிக்காசை எடுத்து தனது சீடன் பேதிரு மூலமாக வரிகட்டினார்.



தொடுத்துக் கொடுத்தவர் : கு.கனகப்பன்



# இருதயத்துடன் பேசுங்கள்!

★ நீங்கள் கோபங் கொண்டாலும், பாவஞ்செய்யாதிருங்கள்; உங்கள் படுக்கையிலே உங்கள் இருதயத்துடன் பேசிக் கொண்டு அமர்ந்திருங்கள்.

(சங்கீதம் 4:4)

★ எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவதில்லை; சிறுமை பட்டவர்களுடைய நம்பிக்கை ஒரு போதும் கெட்டுப் போவதில்லை.

(சங்கீதம் 9:18)

★ நீ உன்னை ஞானியென்று எண்ணாதே; கர்த்தருக்குப் பயந்து, தீமையை விட்டு விலகு.

(சங்கீதம் 3:7)

★ நன்மை செய்ய உனக்குத் திராணியிருக்கும் போது, அதை செய்யத் தக்கவர்களுக்குச் செய்யாமல் இராதே.

(சங்கீதம் 3:27)

★ புத்திமதியை உறுதியாய்ப் பற்றிக் கொள், அதை விட்டு விடாதே; அதைக் காத்துக் கொள், அதுவே உனக்கு ஜீவன்.

(சங்கீதம் 4:13)

★ சோம்பல் தூங்கிவிழப் பண்ணும்; அசதியானவன் பட்டினியாயிருப்பான். (சங்கீதம் 19:15)

★ ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன் கொடுக்கிறான்; அவன் கொடுத்ததை அவர் திரும்பக் கொடுப்பார்.

(சங்கீதம் 19:17)

★ கொடுமையுள்ளவன் மேல் பொறாமை கொள்ளாதே; அவனுடைய வழிகளில் ஒன்றையும் தெரிந்து கொள்ளாதே!

(நீதிமொழிகள் 3:31)



எடுத்துக் கொடுத்தவர் : ச.ஜயப்பன்

# அன்பே... அன்பே...

## ஸ்ரீ சத்யசாய் பாபா



**'தெய்வத் திருவாக்கு' என்ற நூலிலிருந்து...**

★ நீருக்குத் தன்மையும் நெருப்புக்கு வெம்மையும் போல மானிடருக்கு அன்பு இயற்கையானது.

★ அகந்தை தோல் அகற்றி, தன்னல விதையை நீக்கி, அன்புக் கனியை உண்டு மகிழ வேண்டும்.

★ அன்பெனும் விளக்கணைந்தால், பொறாமை எனும் இருள் சூழும்.

★ 'தேன்' என்று சொன்னால், சுவைக்காது. உண்ண வேண்டும். 'சேவை' என்று சொன்னால் போதாது. செய்ய வேண்டும்.

★ ஆண்டவனை அடைவதற்கு சுருக்கமான வழி, - பண்பென்னும் ஜல்லி பரவி, அன்பெனும் தார் போட்ட அழகிய சாலை.

★ இன்றைய உலகம் அமைதியையும், அணுகுண்டையும் விரும்புகிறது. ஆனால் ஒன்று வந்தால் மற்றொன்று ஓடிவிடும்.

★ அன்பு ஒரு முதலீடு. எவ்வளவு போடுகிறோமோ, அதை அவ்வளவு வட்டியோடு திரும்பப் பெறலாம்.

★ மூன்றாம் பிறைக்கு அதன் வளைவே அழகு. மனிதனுக்கு வணக்கமே அழகை தரும்.

★ தொட்டியில் தண்ணீர் நிரம்பியிருந்தாலும் தானாகக் கொட்டாது; குழாயைத் திறந்து விட வேண்டும். அன்பு மனதினுள்ளே நிரம்பியிருந்தாலும், நற்செயல்களினால் திறந்துவிட வேண்டும்.

★ ஆடை அழுக்கை நீக்க சோப்பும் நீரும் பயன்படுவது போல மன அழுக்கை நீக்க அன்பும் தொண்டும் பயன்படும்.



தொடுத்துத் தந்தவர்: அனுராதா சேகர்

# மகாகவி பாரதியார்

மகாகவி என்றதும் வீரமும் தேசிய உணர்வும் தான் நினைவுக்கு வரும். அவரது கவிதைகள் சிலவற்றில் அற்புதமான ஆன்மிக முத்துகளும் உள்ளன:

**நா**ம் இந்த சரீர சாட்சியாக வாழ்வதே வாழ்க்கை என்பதற்கு அப்பால் - மனம் - நமது மனத்தில் தோன்றும் அன்பு-அந்த அன்பின் அலைகளால் மானுடத்தின் நோக்கம் உய்வு பெறல் - அதன் பலனாக - மனமே நம் ஆன்மாவின் லயமாகி நம்மைப் பேரானந்தத்தில் திளைக்க வைத்தல் - இப்படிப் பல பரிணாமங்களை அடைந்து நம் வாழ்வுக்கு ஓர் பூரணத்துவத்தை அளிக்கவல்லது தான் ஆன்மிகம்.

பாரதியின் எத்தனை கோடி இன்பம் வைத்தாய் கவிதையில்...

'சித்தினை அசித்துடன் இணைத்தாய் - அங்கு
சேரும்ஐம் பூதத்து வியனுல கமைத்தாய்;
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சியமாகப்
பலபல நல்ல ழுகுகள் சமைத்தாய்

முக்தி யென்றொரு நிலை சமைத்தாய் - அங்கு
முழுதினையு முணரும் உணர்வமைத்தாய்;
பக்தி யென்றொரு நிலை வகுத்தாய் - எங்கள்
பரமா! பரமா! பரமா!'' என்கிறார்.

ஞான வாழ்வை, ஆன்மீக வழிநடத்தலை மேலும் அம் மகாகவி-



ரசித்துத் தந்தவர் : ப.வெ.மோகன்



# உன்னை நீ அறிவாய்!

சத்குரு ஜகிவாசுதேவ் அவர்களின் 'மனித சக்தி மகத்தான சக்தி' என்ற நூலிலிருந்து...

**வா**ழ்க்கையில் செய்ய விரும்புவதை, அது எதுவாக இருந்தாலும் சரி, அதனை முழுமையாக, எவ்வளவு சிறப்பாக முடியுமோ, அவ்வளவு சிறப்பாக செய்ய முடியுமா என்று உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள்.

முதலில் நீங்கள் யார் என்று கூடத் தெரிந்து கொள்ளாமல், வாழ்க்கைக்கு

# வீரத்தின் பக்தி!



"இத்தரை மீதினிலேயிந்த நாளினில்
இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவராமென்றிங் கூதேடா சங்கம்"
என்று கூவி பறை சாற்றுகிறார்.

மேலும் அந்தக் கவியோகி,
"செய்த தவம்! செய்த தவம்! நெஞ்சே!
தவம் செய்த
எய்த விரும்பியதை எய்தலாம் - வையகத்தில்
அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு."

என்று ஆன்மிக வாழ்வின் அடித்தளமான அன்பை தன் கவி நயத்தால் நிலை நிறுத்துகிறார்.

நாம் நமது மனவெளியில் பரந்த அன்பை விதைப்போமானால் - அதனால் தொண்டு எனும் பயிர் முளைத்து - அதன் பலனாக ஆன்மிக வாழ்வு எனும் பூரணத்துவத்தை உணரலாம்.

## சத்குரு ஜக்கி வாசுதேவ்

என்ன செய்ய முடியும் என்பதை உணர்ந்து செயல்பட முடியுமா? இப்போது உங்களைப்பற்றி நீங்கள் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிற விஷயங்கள் அனைத்துமே மற்றவரோடு ஒப்பிட்டு நீங்களே எடுத்திருக்கிற முடிவுகள்தான்.

இப்பொழுது உங்களுக்குள் என்ன நிகழ்கிறது என்பதுதான் உங்களிடையே பலபேருக்கும் தெரிவதில்லை. இந்தத் தெளிவு இன்மைதான் நம் தேசியப் பிரச்னை. உங்களைப் பற்றி ஒரு முழுமையான தெளிவு உங்களுக்கு இருக்கும் என்று சொன்னால், நம் கடவுளைப் பற்றி எதுவும் தெரியாமல் இருந்தாலும் கூட, உங்களால் மிக அர்த்தமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துவிட முடியும். தன்னைத் தெரிந்து கொள்ளாமல் இந்த உலகம் முழுவதையும் தெரிந்து வைத்துக் கொள்வதால் ஒரு பயனும் கிடையாது.

வெற்றிகள் வரவர பாரங்களும், சுமைகளும்தான் பலருக்கு அதிகரிக்கிறது. அப்படியானால் வெற்றிகள் அவர்களுக்கு வேண்டிய மகிழ்ச்சியை, தேடிய மகிழ்ச்சியைத் தரவில்லை என்றுதானே அர்த்தம். நீங்கள் உங்களைப் பற்றி ஒரு புரிதலை ஏற்படுத்திக் கொண்டாலே ஒழிய, நீங்கள் யார் என்று அனுபவரீதியாக அறிந்தாலே தவிர, இந்த உலகத்துக்கு நீங்கள் எதை எதையோ செய்ய முயற்சிப்பது எந்தப் பலனையும் தராது.

எனவே, உள்நோக்கிப் பாருங்கள். உங்கள் உடலையும், மனதையும் மேல் நிலைக்குக் கொண்டு செல்லுங்கள். இந்த உடலையும் மனதையும் முற்றிலும் புதிய பரிணாமத்திற்குக் கொண்டு போய், அவற்றை எப்படியெல்லாம் பயன்படுத்த முடியும் என்று பாருங்கள்.



ருசித்துச் சொன்னவர்: கௌரி

## திருமுருக கிருபானந்த வாரியார்



# மென்மையும் வன்மையும்!

★ பெண்களை ஆண்கள் காவல் புரிவதனால், பெண்மை தாழ்ந்ததன்று. மென்மையை வன்மை காவல் புரியும். வன்மைக்கு மென்மை அடங்கும். ஆடவர் வன்மையுடையவர். மகளிர் மென்மையுடையவர். தங்கம் மென்மையானது. இரும்பு வன்மையானது. வன்மையான இரும்பு பெட்டியில் மென்மையான தங்கத்தை வைத்துக் காப்பாற்றுவார்கள். காவலிலிருக்கும் தங்கம் தாழ்ந்ததென்று உலகம் கருதுகிறதா? உய்த்து உணர்க.

★ உன் மனைவியைக் காப்பாற்றுவது மிகமிக அவசியம். ஏன்? அவள் உன் வாழ்க்கைத் துணைவி. இம்மைக்கும் மறுமைக்கும் அவள் உனக்குத் துணையாக நிற்கிறாள். மனைவி உனக்குச் செய்யும் பணிவிடைகள் கண்ணுக்குத் தெரிந்தவை.

★ தவமிருந்து, கருவுற்று, பெற்று, பாலூட்டி, மருந்து கொடுத்து தான் பத்தியமிருந்து செய்த தாயின் உதவிகள் உனது கண்ணுக்குக் காணாதவை. ஆதலின் தாய் கடவுள் போன்றவர். அவரைப் பேணிப் பாதுகாத்து வா.

★ ஆடவர் இடது பக்கமாகவும், பெண்டிர் வலது பக்கமாகவும் தலை வைத்துப் படுக்க வேண்டும். அதனால் ஆயுள் வளர்வதுடன் நன்கு ஜீரணமாகும். வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது.

★ மூன்று வேளை நன்றாக சாப்பிடுங்கள். நன்றாக டிரஸ் செய்து கொள்ளுங்கள். ஆபீஸுக்குப் போங்கள். ஆனால் உள்ளத்தில் பக்தி இருக்க வேண்டும். பக்தி இருந்தால் தெய்வம் உங்களைத் தேடி வரும். வேலை செய்தால் கூலி தானாக வருந்தானே? வேலைக்குத் தகுந்த கூலி நிச்சயமாகக் கிடைக்கும். சோம்பேறித்தனமாக இருந்தால் எவன் கூலி தருவான்?



ரசித்து எடுத்தவர் : கு.செளஜன்யா

இதழ் தயாரிப்பு : கல்கி நிறுவன ஊழியர்கள்
புகைப்படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்

# கல்கி

13.5.2007
இதழுடன்
இணைப்பு
16 பக்கங்கள்

+16

குடும்பத்துடன் படிக்க...





# எல்லாம் நமக்காக!



மனத்தை நெறிப்படுத்தும் தத்துவத் துளிகள்!



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 13.5.2007














எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச்

## திருமண பட்டுச் சேலைகளின் கைராசியான ஸ்தாபனம்

மைலாப்பூர்

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ் -ல்

## 05.05.2007 முதல்



பழைய காஞ்சிபுரம்
பட்டு ஜரிகை சேலைகள்
குறைபாடு நிலையிலும்
எக்ஸ்சேஞ்ச் செய்யப்படும்.

மேலும் எங்களிடம்

*சில்க் காட்டன் சேலைகள்,*
*சுங்குடி காட்டன் சேலைகள்,*
*எம்ப்ராய்டரிங் சேலைகள்,*
*பேன்ஸி சுடிதார்கள்* உள்ளன

காஞ்சிபுரம் திருமண
பட்டுச் சேலைகளுக்கும்
வரவேற்புச் சேலைகளுக்கும்

# 50% தள்ளுபடி விற்பனை

SILK MARK

காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளுக்கு
முகூர்த்தம் மற்றும் திருமண கால சலுகை

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ்™

இந்த விளம்பரத்தை எடுத்து வருபவர்களுக்கு மேலும் 5% கூடுதல் தள்ளுபடி உண்டு!

எண்.13/7, வடக்கு மாட வீதி, (அடி தளம்),
கபாலீஸ்வரர் கோயில் அருகில்,
மயிலாப்பூர், போன் : **044-24933097, 24610444**

MASTER & VISA CARDS ACCEPTED

